# கல்கி

ஸ்வீட்டா...ஸ்டைலா...ஸ்மார்ட்டா...

கோடைக்கால கொண்டாட்டம்

**சுற்றுலா ஸ்பெஷல்**

KALKI • 09.05.2010 • ரூ.10.00 • 96 பக்கங்கள்



# அட்சய திருதியை முன்னிட்டு மாபெரும் தள்ளுபடி !

1.51 ct வைர நெக்லஸ்
18.00 gm தங்கத்தின் எடை
விலை **ரூ. 1,08,000**
சலுகை விலை
**ரூ. 92,000**

இச்சலுகை
01.05.10
முதல்
31.05.10

0.84 ct
வைர வளையல்
12.00 gm
தங்கத்தின் எடை
விலை
**ரூ. 63,000**
சலுகை விலை
**ரூ. 55,000**

- வைர நகைகளுக்கு **Perct 4000** தள்ளுபடி
- 7 கல் வைத்தோடு - **25000** முதல்
- வைர மூக்குத்தி **1700** முதல்
- பேன்சி வைரமோதிரம் + பேன்சி Ear + பேன்சி டாலர் **4500** முதல்
- அனைத்து வைரங்களும் VVSEF கலர்
- திருப்பி தரும்பொழுது வைரத்திற்கு மட்டும் **100% அன்றைய மார்கெட் விலை**
- **500** முதல் **5000** வரை மாத சீட்டு + இரட்டிப்பு போனஸ்
- **அட்சய திரியை** அன்று வைரம் வாங்கும் அனைத்து வாடிக்கையாளர்களுக்கும் நகை பெட்டி வழங்கப்படும்.

## Sri Palsani Jewels

110, Dr. Radha Krishnan Road, (Near Sri Krishna Sweets) Chennai - 4
Phone: 2811 1737, 2811 7036 | www.sripalsanijewels.net

# கல்கி

09.05.2010

## ஆன்மிகம்



## அமரர் கல்கி பக்கம்



## அரசியல்



## சிறுகதைகள்



## தொடர்கள்



## சுற்றுலா ஸ்பெஷல்



## சினிமா





கொளுத்துற வெயில்ல... வழியிற வியர்வையில, ஷூட்டிங் ஸ்பாட்டில் - ஒரு கமர்ஷியல் பிரேக்குக்கு நடுவில், சின்ன கலைவாணரிடம் சிம்பிளா ஓரிரு வரியில் விடையளிக்கவும்னு கேட்டதும் தான் தாமதம். ஒரு டஜன் கேள்விக்கும்



# வேஷம் போடறது

டாண்டாண்னு பதில் சொல்லி 'டான்' ஆயிட்டாரு....

***உங்க கனவு ஊர்?***

ஆம்ஸ்டர்டாம்

***எதற்கு?***

நல்லா ஆம்ஸ் ஏத்தி நடிக்க. அட என்ன ஸார்! ரொம்ப டாம் இருக்காம். தண்ணியும் இருக்காம்.

***ஊரில் சாப்பிட விரும்புவது?***

ஆட்டோஃகிராப் வாங்க வரும் ரசிகைகளின் காசில் இட்லி, தோசை!

***கூடவே எடுத்துச் செல்ல விரும்பும் பொருள்?***

அந்த ஊர் மாமியார் வீட்டுக்கு நம்மள அனுப்பாம காப்பாத்தும் நம்மோட பாஸ்போர்ட், விஸா.

***ஊரில் எதையெல்லாம் மறைப்பீர்கள்?***

நான் ரொம்ப ஓபன் டைப்.

***பகிரங்கமா 'தில்'லா ஊரில் செய்ய விரும்புவது?***

அந்த ஊர் டாமில் மீன் பிடிச்சு துப்பாக்கியால சுட்டுத் திங்கணும்.

***விரும்பும் வாகனம்?***

நடிகன் என்கிற அந்தஸ்துக்கு, கேட்காமலேயே லிஃப்ட் கொடுக்க எந்த வண்டியா இருந்தாலும், எம்பெருமான் கருட வாகனத்தைக் கொடுத்தாலும் ஓகே தான்.

***அழைத்துச் செல்ல விரும்பும் நபர்?***

விவேக்குன்னு ஒருத்தனை இந்தப் பூமிக்குத் தந்த என்னோட அம்மை, அப்பன்.

***அந்த ஊரில் எதைப் பண்ப்பீங்க?***

நான் ரொம்ப உஷார்! அந்த ஊரு

## விவேக் பேட்டி

பெருசு'களைத்தான் பார்ப்பேன். (முதியவர்களைத்தான்னு அர்த்தம்)

***ரசிகர்கள் தொல்லையிலிருந்து தப்பிக்க எந்த வேஷத்துல சுத்துவீங்க?***

'வேஷம்' போடறது சுத்தமா பிடிக்காது.

***அந்த ஊர் 'க்ளைமேட்'ட எப்படி ரசிப்பீங்க?***

பகலில் ஊரையும், இரவில் நொறுக்குத்தீனியையும் சுத்திச் சுத்தி சாப்பிட்டுத்தான்.

***கூட வரும் கோலிவுட் கேர்ள்ஃப்ரெண்ட்...?***

பர(ற)வை முனியம்மா - ஏன்னா ஏர் சார்ஜ் மிச்சமில்லே! (கிசுகிசு: இனிமேதான் காதலிகளையே ரெடி பண்ணணும்)

**- ராகவ்குமார்**

# ...டிக்காது!

கல்கியின் இந்தக் கோடைக் கால கொண்டாட்டத்தின் சுற்றுலா ஸ்பெஷலைத் தயாரித்து வழங்கியவர் மூத்தப் பத்திரிகையாளர் சந்திர மௌலி. ரோடரி கிளப் அஃப் மெட்ராஸ் சென்னபட்னா, தலைசிறந்த பத்திரிகைத்துறை பணிக்கான விருதை சமீபத்தில் இவருக்கு வழங்கிச் சிறப்பித்தது. கால் நூற்றாண்டுக்கும் மேலாக கல்கியில் தொடர் கட்டுரைகளையும் சிறப்புக் கட்டுரைகளையும் எழுதிவருவதுடன், சிறப்பிதழ்கள், தீபாவளி மலர்கள் தயாரிப்பிலும் பங்களித்து வருகிறார் சந்திர மௌலி. வாசகர்கள் சார்பிலும் கல்கி சார்பிலும் அவரை வாழ்த்தி மகிழ்கிறோம்.

(-ஆர்)



## தலைசிறந்த பத்திரிகையாளர் விருது!




# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர்:
**லக்ஷ்மி நடராஜன்**

ஆசிரியர் : **சீதா ரவி**

உதவி ஆசிரியர்கள் :
**கதிர்பாரதி, அமிர்தம் சூர்யா**

வடிவமைப்பு :
**எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், பா.கோபால்**

தொலைபேசி : 044 - 4343 8888
தொலைநகல் : 044 - 4343 8899

**ஆசிரியர் குழு :**
044 - 4343 8822
kalki@kalkiweekly.com

**விளம்பரப் பிரிவு :**
044 - 4343 8811
marketing@kalkiweekly.com

**சந்தா பிரிவு :**
044 - 4343 8833
subscription@kalkiweekly.com

**விற்பனை பிரிவு :**
044 - 4343 8844
sales@kalkiweekly.com

இன்டர்நெட் முகவரி :
**www.kalkionline.com**

*இணையதளத்தில்...*
*வாங்கி, வாசித்து, மகிழ...*
**www.sangapalagai.com**

சந்தா விவரம் (ஒரு வருடம்) :
உள்நாடு : ரூ.500/-
வெளிநாடு : ரூ.3,800/-

கல்கி பில்டிங்க்ஸ்,
47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காட்டுதாங்கல், சென்னை - 32

# நீங்கள் கேட்டவை - தராசு

● நென்மேலி ஆர்.நந்தகுமார், திருவண்ணாமலை

? மதமாற்றத் தடைச் சட்டம் மீண்டும் தமிழ்நாட்டில் கொண்டுவரப்பட்டால்தான் தமிழகத்தில் மதமாற்றம் தடுக்கப்படும் இல்லையா?

! மதமாற்றத்துக்குத் தடைவிதிப்பது சட்டப்படி அடிப்படை உரிமைகளை மறுப்பதாகக் கருதப்படக்கூடும். மக்களின் வாழ்க்கைத்தரம் உயர்வது, தரமான கல்வி கிடைக்கச் செய்வது ஆகிய இரண்டும்தான் உயர்வுதாழ்வு பாராட்டாத மனமாற்றத்தை உருவாக்கும். அப்போது மதமாற்றம் தானே நின்று போகும்.

● பவானி கிருஷ்ணா, பெங்களூரு

? "அத்தியாவசியப் பொருட்களின் விலை உயர்வு தமிழகத்தில் பெரும் பாதிப்பை ஏற்படுத்தவில்லை. ஏனெனில் நமது மக்களின் வாங்கும் சக்தி அதிகரித்துள்ளது" என எ.வ. வேலு சொல்கிறாரே -அப்படியும் இருக்குமா?



✱ தோற்றப் பிழை!

! அமைச்சர்களின் வாழ்க்கைத்தரம் ஏகமாக உயர்ந்திருப்பதால், மக்களின் வாங்கும் சக்தியும் அதிகரித்து விட்டது போல் அவருக்குத் தோன்றுகிறது. அரசனும் நாவிதரும் கதை தெரியுமல்லவா!

● இரா.கல்யாணசுந்தரம், மதுரை

? "நான் ஆட்சிக்கு வந்தால் இருபத்து

# கசாப்லை

நாலு மணி நேரமும் தடையில்லாத மின்சாரம் கிடைக்கச் செய்வேன்" என்கிறாரே ஜெயலலிதா?



✱ அபாய உத்தரவாதம்!

! ஆட்சிக்கு வரமாட்டோம் என்ற அபரிமிதமான நம்பிக்கை இருந்தாலொழிய இப்படிப்பட்ட வாக்குறுதிகளை அள்ளி வீசாமல் இருப்பது நல்லது! அப்புறமாகத் தலையைத் தொங்கப் போட்டுக் கொள்ள நேரும்.

● லெ.நா.சிவகுமார், சென்னை-3

? மும்பை தாக்குதலில் கைதான தீவிரவாதி கசாப்பை விசாரணைக்காக தங்களிடம் ஒப்படைக்க வேண்டும் என்று பாக் அரசு இந்தியாவிடம் கோரிக்கை வைத்துள்ளது பற்றி..?

! ஆமாமாம்; அவ

குற்றமற்றவர் என்று தீர்ப்பு வழங்கி விடுவித்துவிட ரொம்ப ரொம்ப வசதியாக இருக்கும், பாக்.அரசுக்கு!

● கே.என்.சுப்பிரமணியன், சென்னை-15

*? மத்திய அமைச்சர் அழகிரி மூன்று நாட்களுக்கு ஒருமுறை தமிழகத்துக்கு விமானப் பயணம் செய்கிறார் - மக்களின் வரிப் பணத்தில்; மக்களவைக்கு வருவதே இல்லை. கைநீட்டி தவறைச் சுட்டிக்காட்டாதது ஏன்?*

! கைநீண்டால் சூரியன் சுட்டுப் பொசுக்கி விடுமே, அதனால்தான்!



* முரண் கொள்கை



* சுடும் உண்மை!

*கிறீர்கள்?*

! இங்கே வளர்ச்சி இருக்கிறது; ஆனால் அந்த வளர்ச்சி, முன்னுரிமை தரப்படவேண்டிய துறைகளில் இல்லை என்பதற்கு மற்றும் ஒரு சான்று. தாறுமாறான வளர்ச்சி மிக ஆபத்தானது. இந்தத் தவறுக்கு முக்கியமான காரணம், அறியாமை அல்ல; அரசியல்வாதிகளின் சுயநலம்தான்.

● பா.இசக்கிமுத்து, வெள்ளாளன்கோட்டை ★

# கேட்கிறதே பாக்.?



* தந்திரக் கோரிக்கை

● எஸ்.பக்கிரிசாமி, திருவாரூர்

*? கோவை அம்மன்குளம் பகுதியில், தமிழக குடிசைமாற்று வாரியம் கட்டும் அடுக்குமாடி கட்டடங்கள் இரண்டு, ஒன்றன் பின் ஒன்றாக பூமிக்குள் புதைந்தது பற்றி...?*

! கட்டடங்கள் மட்டுமா பூமிக்குள் புதைந்தன? ஏழைப்பங்காளன் தி.மு.க. அரசின் மானம் சேற்றில் புதைந்து போயிற்று; குடிசை மாற்றுவாரியத் தலைவரின் கடமை உணர்வு அதல பாதாளத்துக்குப் புதைந்தது; அமைச்சரின் கண்ணியம் புதைந்தது; முதல்வர் செலுத்தவேண்டிய கட்டுப்பாடு தளர்ந்து புதைந்தே போய்விட்டது!

● இரா.வசந்தராசன், அரூர்

*? 'இந்தியாவில் கழிப்பறைகளைவிட செல்ஃபோன்கள் அதிகமாக உள்ளன' என்ற ஐ.நா. அறிக்கையைப் பற்றி என்ன நினைக்*

*? சாதியை ஒழிக்க சமத்துவபுரங்களைத் திறந்துவரும் கலைஞர்தான் கள்ளர், அகமுடையார், முக்குலத்தோர் என இனைக்கு ஒரு அமைச்சர் பதவி ஒதுக்கும் கலாசாரத்தை ஆரம்பித்ததாகச் சொல்கிறார்களே?*

! அனைத்து பிரிவினருக்கும் அமைச்சரவையில் இடம்தரவேண்டும் என்ற நோக்கில் செயல்படுவது வேறுபாடுகளை நிலைக்கச் செய்யுமே தவிர, களையாது. மாறாக, ஜாதியை நோக்காமல், ஆற்றல்மிக்க நேர்மையாளர்களை அமைச்சர்களாக நியமித்தால், அனைத்துப் பிரிவினருக்கும் நியாயம் கிடைக்கும்; தமிழகம் விரைந்து முன்னேறும்.

● ராஜி ராதா, பெங்களூரு

*? இந்தியர்கள் சோம்பேறிகள் என*

❑ ரூ. 150 பரிசு பெறுபவர் :
கு.கணேசன், மறைமலைநகர்

* ரூ.75 பரிசு பெறுபவர்:
பா.இசக்கிமுத்து,
வெள்ளானைக்கோட்டை

தலாய் லாமா சொல்லியிருக்கிறாரே?

! இந்தியர்கள் சோம்பேறிகள் என்று அவர் சொல்லவில்லை. சீனர்களிடம் இருக்கும் உழைப்பும் இந்தியர்களின் மூளையும் ஒன்றுசேர்ந்தால், 'இந்தியா மிகப் பெரிய வல்லரசாகி விடும். சீனர்களிடமிருந்து இந்தியர்கள் கடும் உழைப்பைக் கற்றுக் கொள்ளவேண்டும்' என்றுதான் சொன்னார்.





* தூணா வீணா?

● ஏ.சுகுமார், காட்பாடி

? சன் பிக்சர்ஸ், தயாநிதி அழகிரி, உதயநிதி ஸ்டாலின் என மூன்று தூண்கள் இன்று தமிழ்த் திரையுலகைத் தாங்கி நிற்கின்றனவே?

! தமிழ்ப்படங்களின் தரத்தை உயர்த்தும்படி செயல்பட்டால், தூண்கள்; இல்லையேல் வீணர்கள்.

● கு.கணேசன், மறைமலைநகர் ❑

? கேரள அரசு, சினிமா தியேட்டர்களில் பெரியாறு அணை உடைவது போலவும் அதனால் ஏற்படும் உயிரிழப்புகள் உள்பட பல கொடூரங்களையும், கிராஃபிக்ஸ் மூலம் படமாக்கிவிட்டு, அதைத் திரையிட்டு வருகிறதே?

! நீதிமன்ற அவமதிப்பு - முதல் குற்றம் இந்திய ஒருமைப்பாட்டுக்கு வேட்டு வைப்பது இரண்டாவது குற்றம். இதைப் பார்த்துக் கொண்டு மத்தியஅரசு நடவடிக்கை எடுக்காமல் சும்மா இருப்பது மூன்றாவது பெரிய குற்றம்.

● என்.பாலசுப்பிரமணியன்,
சென்னை-4

? சசி தரூர் அமைச்சரவையிலிருந்து விலக்கப்பட்டுள்ளது பற்றி...?

! சசி தரூரை விலகச் சொன்ன வேகத்தைக் காட்டிலும் பவார், படேல், சீனிவாசன் முதலான சில பேரில் குற்றச்சாட்டுக்கு இடமே இல்லை என்று அறிவிப்பதில் அரசு காட்டிய அவசரம் மிக அதிகம்! யோசிக்க வைக்கிறது!

● ஆர்.மாதவராமன், கிருஷ்ணகிரி

? எங்கோ பிறந்த ஒருவர் இன்று விருத்தாசலம் தொகுதியில் நின்று வெற்றி பெற்றிருப்பதாக விஜயகாந்த்தை குறைகூறுகிறாரே ராமதாஸ்?

! விருதாவான குற்றச்சாட்டு! ராமதாஸ் போலவே விஜயகாந்த்தும் இந்தியாவில் பிறந்தவர்தான். இந்தியக் குடிமகன்தான் அமெரிக்காவாழ் இந்தியர்கள் அமெரிக்க அரசில் இடம்பெறும் காலம் இது டாக்டர்!

## இதுதாங்க முக்கியம்!

## டூர் டிப்ஸ்

* எந்த ஊருக்குகெல்லாம் போறீங்களோ அந்த ஊரைப் பத்திய தகவல் குறித்த பிரசுரங்களை வாங்கிப் படியுங்க! போகிற இடங்களோட மேப் கைவசமிருக்கட்டும்.

* பயணத்துக்கான விமான, ரயில், பஸ், டிக்கெட், உங்க அடையாள அட்டை, பாஸ்போர்ட்(அவசியமானால்) இவற்றை மட்டுமில்லாம, உங்க கிரெடிட் கார்டைக் கூட ஜெராக்ஸ் எடுத்து வெச்சிக்கோங்க.

* ஊருக்குப் புறப்படறப்போ, வீட்டு வாசலில் ரொம்ப சீன் காமிக்காதீங்க.

* தலைவலி, ஜலதோஷம், வயிற்று வலி, வாந்தி, வயிற்றுப் போக்கு மாதிரியான பொதுவான உபாதைகளுக்குரிய மாத்திரைகளைக் கையோடு எடுத்துக்கொண்டு போங்கள். டாக்டர் இல்லாதபோது, ஒரு அவசரம்னா உடனடியாக அந்த மாத்திரைங்க கைகொடுக்கும்.

* கார் நெம்பர், டிரைவர் பெயர், அவரது மொபைல் நெம்பர், கார் கம்பெனியின் டெலிபோன் நெம்பர் எல்லாவற்றையும் கேட்டு எழுதி வெச்சிக்கங்க. டூரிஸ்ட் ஸ்பாட்கள்ல, கார் எங்கே நிறுத்தி இருக்குன்னு தேடுறப்போ, கார் நெம்பர் தெரியாது போனா ரொம்ப திண்டாட்டமாயிடும்.

சின்ன வயது, சிறகுகளுக்கான காலம். வான வீதியில் வலம் வர வேண்டி, மனம் ஏங்கும் பருவம். இன்று பணி நிமித்தம் வெளியூர் செல்ல நேர்கிற போதெல்லாம், என் குழந்தைகள் இரண்டும் 'நாங்களும் வருகிறோம்' என்று ஓடிவந்து கால்களைக் கட்டிக் கொள்ளும்போது, என் கடந்த காலம் கன்னத்தில் கை வைக்கும்.

சுற்றுலா என்பது படர்ந்த விரியாத காலத்தில், எங்கள் பள்ளிப் பருவம் தொடங்கியது. அருகிலிருக்கும் கிராமங்களே அதிகப்படி. பக்கத்து மாவட்டமே வெளிநாடு. எங்கள் சொந்த ஊர் சிவதாபுரம் அருகே காட்டூர் என்கிற கிராமம். மொத்த வீடுகள் இன்றும் ஐம்பத்திரண்டே. நகரத்தில் குடியேறிய நாங்கள், அங்கு விடுமுறைக்குச் செல்வதுதான் அப்போதைய சுற்றுலா. அங்கு காலாற நடந்து போகிற பயணமும், போடிநாயக் கன்பட்டி ஏரிக்கரை மீது... வரிசையாக வளையல் மீது பதிந்த மரகதக் கற்கள்போல் வளர்ந்திருக்கும் பனை மரங்களினடியில் செல்லும் அனுபவமுமே, அன்று மனத்தில் மருதாணி நடவும்.

இன்றிருக்கும் காட்சி ஊடகங்கள் அன்றில்லாததால், வியக்கும் தன்மை அதிகமிருந்ததால், பார்க்கும் இடங்கள் எல்லாமே எழில் வாய்ந்த இடங்களாகி மயக்கும் தன்மையை ஏற்படுத்தின. ஐந்தாம் வகுப்புப் படிக்கும் போது ஆண்டுத் தேர்வு விடுமுறையில், வாழப்பாடிக்கருகே இருக்கும் பேளூர் கிராமத்துக்குச் சென்றிருந்தேன். அங்கு எங்கள் அத்தை வீடு. இலையில் உணவைப் பரிமாறி விட்டு, சாப்பிடாவிட்டால் அழுகின்ற அத்தை; சிறுவாணி நீர் போலக் களங்கமில்லா மனம். அவர்கள் ஊர் முழுவதும் பாக்குத் தோப்பு



வெ.இறையன்பு

கரும்புப் பாலைக் காய்ச்சும்போது, இளந் தேங்காயை அதில் ஊறவைக்க, அது பாகில் ஊறி நாவில் கரையும். ஒருமாதம் அங்கே தங்கிய வாழ்வு, இயற்கையை எனக்கு இன்னும் அகலமாக அறிமுகப்படுத்தியது. இன்று 'ஊரகச் சுற்றுலா'வைப் பெரிய அளவில் விரிவுபடுத்த அதுவே எனக்கு ஆதாரம். எனக்குள் ஒளிரும் 'கிராமத்தான்' எனக்குப் பெருமையையே ஏற்படுத்துகிறான்.

சாரணர் இயக்கத்தில் 'மலை ஏறுதல்' ஒரு செய்முறை. என்னுடன் படித்த பாஸ்கரன், ரவிச்சந்திரன், ராமசுந்தரம் எல்லோரும் ஏற்காடு நடந்து பயணிப்பது என முடிவு செய்தோம். மலைப்பாதை வழியாகப் பயணம். மதியம் சமைக்க ஒருவர் லை, ஒருவர் எண்ணெய், ஒருவர் காய்கறி என்று சுமந்து கொண்டு சென்றோம். மேலே சென்றதும், பேருந்து மூலம் திரும்பலாம் என்பது திட்டம். காலையில் எங்களிடமிருந்த ரொட்டித் துண்டுகளுக்கு குரங்குகள் போட்டி! ண்டூர் வரை சென்ற நாங்கள், திடீரெனத் திரண்ட மேகங்களைக் கண்டதும் 'மழை வரும்' என்று வானிலை அறிக்கையை வாசித்துவிட்டு, அவசர அவசரமாகக் கீழே தலைதெறிக்க ஓடி வந்தோம். 'ஏறுவதைவிட இறங்குவது எளிது' என்பதை அப்போது புரிந்துகொண்டோம்.

அடிவாரத்தில் கள்ளிகளைச் சேர்த்து, கற்களை மூட்டி ராமசுந்தரம் உப்புமா கிளற, மற்றவர்கள் வெங்காயம் உரித்துத் தந்து, அதைச் சாப்பிடும் முன்னரே கண்ணீர் சிந்தினோம். சாப்பிடும்போதுதான் உப்பு கொண்டு வர மறந்தது தெரிந்தது. 'உப்புமா' கடைசியில் 'உப்பு' இல்லாத மாவானது. இருந்தாலும் அதிலும் ஒரு ருசி இருந்தது.

# ாடத்திட்டம்!

**சே**லத்தில் இருப்பவர்களுக்கு சேர்வராயன் மலையே உதகமண்டலம். ஒருமுறை அங்கு பத்து நாட்கள் சென்றேன். உறவினர் வீட்டில் வாசம். அங்கு பல இடங்களுக்குப் போனபோது, மேகமாய் உள்ளம் தாவியது. அடிவாரம்வரை மிதிவண்டியில் பயணித்து, அங்கு தேசிய மாணவர் பயிற்சிக்காகத் துப்பாக்கி சுடுவது உண்டு. என்னுடைய எல்லாக் குண்டுகளும் தவறாமல் இலக்கை அடையும்; ஆனால், அது எனக்கு இரு பக்கங்களும் இருப்பவர்களுடைய இலக்கு! என்னுடைய இலக்கு அப்படியே அடுத்து வருபவர்களுக்கு முழுசாய்க் கிடைக்கும். இலக்குகளை நான் எப்போதுமே வீண டிப்பதில்லை.

### சுற்றுலா விருதுகள்

2008-09ஆம் ஆண்டுக்கான தேசிய சுற்றுலாத் துறையின் நான்கு விருதுகள் தமிழ்நாட்டுக்குக் கிடைத்துள்ளன. துணை ஜனாதிபதி ஹமீது அன்சாரி, இதற்கான விழாவில் கலந்து கொண்டு விருதுகளை வழங்கினார். தமிழ்நாட்டுக்கான விருதுகளை **தமிழக அரசின் சுற்றுலா, கலை மற்றும் பண்பாட்டுத்துறை செயலாளர் வெ.இறையன்பு ஐ.ஏ.எஸ்.**பெற்றுக் கொண்டார். இது தவிர, அகில உலக அளவிலான விருது ஒன்றும் தமிழ் நாட்டுக்குக் கிடைத்துள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

சேலத்திலிருக்கும் சித்தர் கோயில் அழகிய பகுதி. எல்லா இடங்களிலும் நீர் ஊறும் மலைப் பிரதேசம். நானும் என் நண்பர்களும் மிதி வண்டியில் அங்கு சென்று மாலைவரை இருந்துவிட்டுத் திரும்பி வருவோம். அதுவே அன்று எங்கள் சாகசச் சுற்றுலா.

கோவை வேளாண் பல்கலைக் கழகத்தில் படிக்கும்போது விடுதி வாழ்வு.

வேளாண் படிப்பு மனத்தில் மகிழ்ச்சி விதைகளைத் தூவி, கற்பனை உரம் இட்டு, கவலைக் களைகளை அகற்றி, திருப்திக்கதிர்

அறுவடை செய்யும் கல்வி. அங்கிருக்கும் தாவரவியல் பூங்கா எங்களுக்கு ஓய்வு நேரத் தவச்சாலை. அங்கிருந்த முகலாயத் தோட்டம், ஜப்பானியப் பூங்கா போன்றவை எனக்குள் புதிய நினைவுகளைப் புகுத்தின. அங்கிருக்கும் மரங்களே என் கவியரங்க ஒத்திகைக்குத் தலையசைக்கும் வாசகர்கள்.

**க**ல்லூரியில் கடைசியாண்டு. அகில இந்திய சுற்றுப்பயணம். என் நண்பர்கள் சிலர் வட இந்தியாவில் குளிர் இருக்கும். எனவே நிறையக் கம்பளித் துணிகளோடு செல்ல வேண்டும் என அறிவுறுத்தினர். நானோ 'நம்மால் குளிரைத் தாங்க முடியும்' என்கிற தெனாவெட்டுடன் சென்றேன். ஓரளவு ஹிந்தி தெரியும்.



**வாழ்க்கை பல அதிசயங்களை ஒளித்து வைத்திருக்கிறது என்பதை ஒவ்வொரு பயணமும் உணர்த்துகிறது.**

ப்ளஸ்டூவிலேயே 'பிரவீன்' தேர்வு எழுதியதால் சமாளிக்க முடியும். என் நண்பர்களுக்கு நானே 'துபாஷி.'

பிப்ரவரி மாதம். டில்லி குளிர் தாங்க முடியவில்லை. மகூதியில் எல்லோரும் இறங்கினார்கள். எங்கும் பனிமழை. என்னால் ஒருஅடி கூட எடுத்து வைக்கமுடியவில்லை. பல் தந்தியடிக்க நடுங்கிக் கொண்டிருந்தேன். 'இந்த இடத்திலெல்லாம் மனிதன் இருப்பானா?' எனக் கோபம் வேறு. ஆனால்,

அதே இடத்தில், ஐ.ஏ.எஸ். பயிற்சிக்கா
இரண்டாண்டுகள் கழிக்க வேண்டிய க
டாயம் வருமென்று அன்று எனக்குத் தெரி
வில்லை. ஹரித்துவாரில் எங்களோடு வ
திருந்த பயணியொருவர் எவ்வளவோ
அறிவுறுத்தியும் பொருட்படுத்தாமல் உள்ே
செல்ல, கங்கை அவரை அடித்துக்கொண்
சென்ற காட்சி இன்றும் மனத்தைத் துவ
யாய்ப் பிழிகிறது.

பயிற்சியின்போது நாங்கள் இமயமலை
யின் உட்பகுதிகளுக்கு நடைபயணம் செ
வது கட்டாயப்பாடம். எங்களோடு கோவே
கழுதைகளில் வியாபாரிக வங்காளிகள், அ
இடங்களில் பயண
செய்வதைப் பார்த்தபோது
அவர்கள் வைராக்கிய
அதிசயப்பட வைத்தது
இமயம் அழகுகளின் சிகர
இனிய நிகழ்வுகளை
சந்திக்கக் கடினமான ப
ணமே அச்சாரம்.

**வா**ழ்க்கை பல அதி
யங்களை ஒளித்து வை
திருக்கிறது என்பதை என்
டைய ஒவ்வொரு ப
ணமும் எனக்கு உண
ியது. முதிர்ச்சியையு
அனுசரணையையும் அன
எனக்குக் கற்றுத் தந்தன.

இன்று அடிக்கடி பணி நிமித்தமாக
பயணங்கள். ஆனால், அவை பாதுகா
பானவை. சின்ன வயதில் பயணித்த நிச்ச
மற்ற பயணங்களைப்போல அவற்றில் சுவா
சியமில்லை. பேருந்திலும், மிதிவண்
யிலும், மலைப்பாதையிலும், சில நேரங்களி
சரக்குந்துகளிலும் பயணம் செய்யும்போ
ஏற்படும் குலுக்கல்கள்தாம், நம் மு
கெலும்பை வலுவாக்குகின்றன.

ஓம் ஸ்ரீ சரவண பவ துணை

## அன்னதானமும், ஆன்மீகமும் எனது கண்கள்!






பழநி முருகன் பேரருளால் எங்கள் குலக்கொழுந்து சரவணகுமார் ஆவியுடன் பேசி திருமண தடை, தொழில் முடக்கம், அரசியல் பின்னடைவு, செய்வினைக் கோளாறு, பில்லி, சூன்யம் போன்ற அனைத்து பிரச்சனைகளுக்கும், உங்கள் குடும்பத்தில் இறந்தவருடன் பேசவும்.

**அன்பு மகன் சரவணனுக்கு கோவில் கட்டி கும்பாபிஷேகம் செய்து பெருமைப்படுத்தியுள்ள**

*சிவகாசி பிரபல ஆவி ஜோதிடர் டாக்டர் எம்.ஜி. இராஜா,* M.A., Ph.D(USA)., D.A., அவர்கள் தீர்வு கண்டு வருகிறார்.

# நான் சொன்னவைகள் அனைத்தும் பலித்தன !

● 2006 தேர்தல், நடந்து முடிந்த சட்டமன்ற தேர்தலில் தி.மு.க. தலைமையில் கூட்டணி ஆட்சியே அமையும். 40 ஆண்டுகளுக்குப் பின்பு காங்கிரஸ் கட்சி தமிழகத்தில் கூட்டணி ஆட்சியில் ஆளும் கட்சி அந்தஸ்து பெற்று சட்டமன்றத்திற்குள் நுழையும் என்றும், ரேபரேலியில் சென்ற முறையை விட கூடுதல் ஓட்டு வித்தியாசத்தில் வெற்றி பெறுவார் என்றும் திருமதி சோனியா காந்தி அவர்களுக்கு பேக்ஸ் மூலம் முன்பே தெரியப்படுத்தியுள்ளேன். அதே போல ம.தி.மு.க. முதல் முறையாக சட்டமன்றத்திற்குள் நுழையும் என்று திரு. வைகோ அவர்களுக்கு பேக்ஸ் மூலம் முன்பே தெரியப் படுத்தியுள்ளேன். ● 17.04.1999ல் வாஜ்பாய் அரசு கவிழும் என்று முன்கூட்டியே, டெல்லியில் இருந்த செல்வி ஜெயலலிதா அவர்களுக்கு தந்தி மூலம் தெரிவித்துள்ளேன். 1999 பாராளுமன்ற தேர்தலைப் பற்றிய எங்களது கருத்து கணிப்பு தமிழக அளவிலும், இந்திய அளவிலும் மிகச் சரியாக இருந்தது. சட்டமன்றதேர்தலில் 124 இடங்களுக்கு குறையாமல் வெற்றி பெற்று 15.08.2001ல் கோட்டையில் முதலமைச்சராக கொடியேற்றுவீர்கள் என்று 26.01.2001ல் செல்வி ஜெயலலிதா அவர்களுக்கு ஃபேக்ஸ் மூலம் தெரியப்படுத்தியுள்ளேன். சில வழக்கில் சாதகமாக தீர்ப்பு வந்து விடுவிக்கப்படுவார் என்று 22.01.2004ல் கூரியர்/பேக்ஸ் மூலம் தெரியப்படுத்தியுள்ளேன். ● மறைந்த முதல்வர் எம்.ஜி.ஆரின் ஆவியுடன் பேசி ஆண்டிபட்டி மற்றும் சாத்தான்குளம் இடைத்தேர்தலில் அ.தி.மு.க. வெற்றி பெறும் என்றும் கூறியுள்ளேன். வீரப்பனை கைது செய்ய இயலாது. சரணடையவும் மாட்டான். பிணமாகத்தான் கிடைப்பான் என்றும், திரு.ஸ்டாலின் கைது செய்யப்படுவார். ஆனாலும் தமிழ்நாட்டின் ஒரு பெரிய தலைவராவார் என்றும் கூறியது உண்மையாகியுள்ளது. "நான் சொன்னவைகளும் பலித்தன" என்ற தலைப்பில் ஆவிகள் உலகம் ஜூலை 2001 இதழில் பிரசுரமாகியுள்ளது. (பத்திரிக்கை செய்திகள்) வீரப்பனால் கடத்தப்பட்ட ராஜ்குமார் தாமதமாக பல சிரமங்களுக்குப் பின் உயிருடன் மீட்கப்படுவார் என்றும், நக்கீரன் கோபால் பல சிரமங்களை சந்திப்பார் என்றும் 04.08.2000 அன்றே தெரிவித்துள்ளேன். இதை கர்நாடக முதல்வர் மூலம் ராஜ்குமார் மனைவிக்கும் தெரியப் படுத்தியுள்ளேன். (சென்னை பதிப்பு உட்பட பல பத்திரிக்கை செய்திகள்) ரஜினியின் அரசியல், த.மா.கா.வின் இணைப்பு மற்றும் பல முக்கிய நிகழ்வுகள் குறித்து 21.07.2001ல் தினமலர் பேட்டியில் பிரசுரமாகியுள்ளது. திரு. அழகிரி கட்சியிலும் ஆட்சியிலும் பதவி வகிப்பார் என்று தினகரன் பத்திரிக்கையில் 2004ம் ஆண்டு வெளியிடப்பட்ட செய்தி உண்மையாகியுள்ளது.

அமெரிக்காவின் டாக்டர் பட்டம், திரு. வாஜ்பாய், திருமதி. சோனியா காந்தி ஆகியோரின் பாராட்டு, டாக்டர் சிவாஜி விருது, கவிஞர் கண்ணதாசன் விருது, சேவாரத்னா, ஆன்மீகச் செம்மல், ஆவியுலக வேந்தன், ஜாம்பவான், ஞானஒளி, நல்மாமணி, கோல்டு இன் கோல்டு, தமிழ்நாடு சினிமா கலை மன்றம் சார்பாக 2001, 2002, 2003ஆம் ஆண்டுகளுக்கான சிறப்பு மற்றும் பல விருதுகள் வழங்கப்பட்டுள்ளன.

தொடர்பு கொள்ளவும்

**டாக்டர். எம்.ஜி. இராஜா** M.A., Ph.D. (USA), D.A.

ஆவி ஜோதிடர் (SPIRITUAL ASTROLOGER)

சரவணகுமார் இல்லம், 5/121, காமேஷ் நகர், சிவகாசி மேற்கு - 626 124. விருதுநகர் Dt., (T.N.)

PH : (04562) 255555, Cell : (0) 94434 41999.

**காணிக்கை ரூ. 500/- வெளிநாடு 3000/- முன் அனுமதி அவசியம்!**



# "இனி துப்

"மன அமைதிக்காகவும், தியானம் செய்வதற்காகவும் நான் அடிக்கடி ராம கிருஷ்ண மடத்துக்குச் செல்வதுண்டு. 2004-ம் வருடம் சென்னையில் நித்யானந்தா தியான வகுப்புகள் எடுப்பதாகக் கேள்விப்பட்டு, ஆர்வத்தின் பேரில் அந்த வகுப்பில் கலந்து கொண்டேன். ஒரு புத்துணர்வும் மனஅமைதியும் கிடைத்தது. அடுத்த இரண்டு வருடம் தொடர்ந்து அவரது தியான வகுப்புகளில் கலந்து கொண்டேன். இதன் மூலம் தான் எனக்கு நித்யானந்தாவுடன் பழக்கம் ஏற்பட்டது. 2006-ல் அவர் கேட்டுக் கொண்டதற்காக, அவருடைய ஆசிரமத்தில் சிஷ்யனாக இணைந்து கொண்டேன்'' என்று சொல்லும் லெனின் கருப்பன், நித்யானந்தாவின் பேரில் புகார் கொடுத்துள்ள அவரது சிஷ்யர். நித்யானந்தாவை பெங்களூரு போலீஸார் கைது செய்திருக்கும் இச் சமயத்தில், லெனின் கருப்பனோடு பேசினோம்...

**நித்யானந்தாவுக்கு ஆயிரக்கணக்கான கோடி சொத்து சேர்ந்தது எப்படி?**

"தியான வகுப்புகளுக்கு பணம் வாங்குவார். ஒரு பக்தர் தன் வீட்டுக்குக் கூப்பிட்டு பாதபூஜை செய்தால் 25,000 ரூபாய். வீட்டில் அவரே பூஜை செய்தால் நாலு லட்சம். வெளிநாடுகளில் டாலர் கணக்கில் கொட்டுவார்கள். தவிர, புத்தகங்கள் விற்பனை மூலம் நல்ல வசூல். முழு சொத்து விவரமும் நித்யானந்தாவின் தம்பியான கோபி என்கிற நித்யாசுவரானந்தாவுக்குத்தான் தெரியும்.''

**நிறைய புத்தகங்கள் எழுதியிருக்கிறாரே?**

(சிரிக்கிறார்). புத்தகம், சி.டி., டி.வி.டி. வெளியீட்டுப் பிரிவுக்கு நான்தான் பொறுப்பு. புரா ணங்கள், இதிகாசங்கள் வேதங்கள், உபநிஷத்துக்கள் ரமணர், ராமகிருஷ்ணர் ஓஷோ ஆகியோர் உப்தேசங் களிலிருந்து நித்யானந்தா பேசுவதற்கு பாயிண்டுகளை எடுத்துக் கொடுக்க 200 பேர் கொண்ட குழு இருக்கிறது. நல்ல பேச்சாற்றல் கொண்ட நித்யானந்தா அந்த பாயிண்டுகளைத் தொகுத்துப் பேசுவார். பின்னர் அவை புத்தகங்களாக வரும். எதுவும் அவரது ஒரிஜினல் சரக்கல்ல; அவரது தியான வகுப்புகளும் வேத, உபநிஷத்துகளை அடிப்படையாகக் கொண்டவைதான். இந்து சமயம் சொல்லாத எதையும் புதிதாக அவர் சொல்லவில்லை.''

**பல பிரபலங்கள் தங்கள் நோய்களை நித்யானந்தா குணமாக்கியதாகச் சொல்கிறார்களே?**

"கடுமையான தியானமும், யோகாவும் பல நோய்களை 50 சதவிகிதம் கட்டுப்படுத்தும். இதுதான் பலருக்கு நடந்திருக்கிறதே தவிர, நித்யானந்தாவின் ஆசியால் அல்ல; அதுவும் கை, கால், கழுத்து வலி போன்றவைகளால் பாதிக்கப்பட்டவர்களுக்குதான் நிவாரணம் கிடைத்திருக்கிறது.''

**ஒருவர் தம்மையே 'கடவுள்' என்று சொல்லிக் கொள்வதை உங்களால் எப்படி நம்ப முடிந்தது?**

"அந்த செட்-அப்பில் நாம் அறிமுகமாகும்போதே, அவரைப் பற்றி அப்படியொரு பிரமிப்பை உருவாக்கி விடுகிறார்கள். நாம்

ஆசிரம வளாகத்தில் நுழைந்து விட்டோமென்றால், ஏதோ மூளைச்சலவை செய்யப்பட்டு, வசியம் செய்தது போல் ஆகிவிடுவோம். இது ஒரு மாயைதான். அதிலிருந்து விடுபட முடியாததால்தான், பல பெண்கள் பாலியல் கொடுமை உட்படப் பல்வேறு பிரச்னைகளில் அகப்பட்டுக் கொண்டு விழிக்கிறார்கள்.

**நித்யானந்தாவை நீங்கள் சந்தேகிக்க ஆரம்பித்தது எப்போது?**

# முடியாது?''

– லெனின் கருப்பன்

பாதிக்கப்பட்ட ஒரு பெண்ணே என்னிடம் சொன்னார். எனக்குக் கடுமையான அதிர்ச்சி. ஒரு மாதம் பெரிய மனப்போராட்டம். அதன் பின்னர்தான், இந்த நம்பிக்கைத் துரோகியை அம்பலப்படுத்த வேண்டும் என்று முடிவு செய்து, உயிரைப் பணயம் வைத்து காமிராவில் படம் எடுக்க ஏற்பாடு செய்தேன். சாதாரணமாக நித்யானந்தா இருக்கும் அறைக்குள் யாரும் நுழைய முடியாது. ஏழு கட்ட பாதுகாப்பு உண்டு. ஆசிரமத்தில் முப்பத்தெட்டு அறைகள். ஒன்றுக்கொன்று தொடர்பு கிடையாது. நித்யானந்தா தங்கியிருக்கும் கட்டடத்தில் ஆண்களுக்கு அனுமதி இல்லை. ''இனி எந்தப் பெண்ணும் நித்யானந்தாவால் பாதிக்கப்படக்கூடாது'' என்ற எண்ணத்தில் துணிந்து செயல்பட்டேன். இதுவரை நாற்பதுக்கும் மேற்பட்ட பெண்களும், நூற்றுக்கணக்கான வெளிநாட்டுப் பெண்களும் அவரால் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள்.



**அப்படியானால் இவரால் பாதிக்கப்பட்ட எந்தப் பெண்ணும் ஏன் புகார் கொடுக்கவில்லை?**

மீடியா இந்த விவகாரத்தை நாறடிக்கும் என்பதால் பயப்படுகிறார்கள். அது தவிர, ஆசிரம பிரம்மச்சாரிகளிடம், ''சில தாந்த்ரீகங்களைத் தெரிந்து கொள்ளப் பாலியல் தொடர்புகள் நடைமுறைப்படுத்தப்படும். அவற்றை வெளியில் சொல்லக் கூடாது'' என்று ஒரு ஒப்பந்தத்தில் கையெழுத்து வாங்கியுள்ளார். அதனால் பாதிக்கப்பட்டவர்கள் பயந்த நிலை முன்பு இருந்தது.''

**சட்டப்படி நித்யானந்தா பேரில் நடவடிக்கை எடுக்க முடியுமா? அதற்கு இடம் இருக்கிறதா?**

''அவர் இனி தப்ப முடியாது. கர்நாடகக் காவல் துறை முதலில் கொஞ்சம் கணக்கமாகத்தான் இருந்தது. இப்போது கைது செய்த பின் சரியான திசையில் விசாரணை போகிறது.''

**- ப்ரியன்**



# கல்கி



2010 மே 9
விக்ருதி சித்திரை 26
மலர் : 68
இதழ் : 41

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - பாரதியார்

## வழக்கறிஞர் தொழிலுக்கே தலைகுனிவு!

சென்னை உயர்நீதிமன்ற விழாவில் நடந்த பகிரங்க வன்முறையை மறந்துவிடவேண்டும் என்று முதல்வர் கேட்டுக் கொண்டிருப்பது அபாயகரமானது. இந்த அணுகுமுறையை வேறு பல குற்றங்கள் விஷயத்திலும் கையாள, அதிகாரிகளுக்கு அனு மதியும் ஊக்கமும் அளித்தது போலாகிறது.

அம்பேத்கர் சிலை திறப்பு விழாவில் வழக்கறிஞர்களுள் இரு பிரிவினர் ஒருவரை ஒருவர் தாக்கிக் கொண்டது சாமானிய விஷயம் அல்ல. வழக்கறிஞர் தொழிலுக்கே தலைகுனிவு ஏற்படுத்தும் இந்நிகழ்வை, வெறுமே மறந்துவிடுவது சாத்தியமும் அல்ல; சரியும் அல்ல.

பிப்ரவரி 2009ல் உயர்நீதிமன்ற வளாகத்தில் நடந்த வழக் கறிஞர்கள் - போலீஸ் மோதலின் அதிர்வுகள் இன்னமும் அடங்க வில்லை. அந்த நிகழ்வுக்குப் பொறுப்பாக்கப்பட்டு, சில காவல் துறை அதிகாரிகள் தண்டிக்கப்படவேண்டும் என்பது ஒரு தரப்பு வழக்கறிஞர்களின் 'தீர்ப்பு'! அதை நடைமுறைப்படுத்தத் தவறிய தற்காக முதல்வர் பேரில் அதிருப்தி கொண்டு, சிலை திறப்பு விழாவின்போது கறுப்புக் கொடி காட்ட அவர்கள் முற்பட்டிருக் கிறார்கள்.

கறுப்புக்கொடி போராட்டம் என்பது, அனுமதி பெற்று, உரிய இடத்தில் நடத்தப்பட வேண்டிய ஜனநாயக முறையிலான எதிர்ப்பு. ஆனால், வழக்கறிஞர்கள், தாங்கள் சட்டத்துக்கு அப்பாற் பட்டவர்கள் என்பதுபோல், விழா நிகழ்ச்சியின் இடையில் அத




னத் திடீரென்று செய்ய முற்பட்டது கண்டனத்துக்குரியது. அவர்களுக்கு அன்றைய னம் அனுமதி மறுக்கப்பட்டிருந்தாலும், ஜனநாயக ரீதியில் எதிர்ப்பை வெளிப்படுத்த வறு எத்தனையோ வழிகள் உள்ளன.

வழக்கறிஞர்கள் அமைப்புகளில் கட்சி அரசியலும் அதற்குரிய இதா (அவ)லட்சணங் ளும் ஊடுருவியிருப்பது கண்கூடு. இந்த நிலைமை உருவாகி வேர்கொள்ளும்வரை ரகம் நீதித்துறையும் ஏன் பேசாமலிருந்தன? இவர்களை அனுசரித்துப் போவதால் தாயம் என்கிற நோக்கா? அல்லது இவர்களை எதிர்ப்பது வீண் வம்பு என்கிற அச்சமா? ட்சிக்காரர்களைப் 'பாதுகாக்க' வேண்டும் என்கிற சார்பு நிலையா?

இவற்றுள் எது காரணமாக இருந்தாலும், அது நீதிபரிபாலனத்தையும் ஜனநாயக ல்மரபுகளையும் வெகுவாகப் பாதிக்கும்; ஏற்கெனவே பாதித்தும் இருக்கிறது.

நிகழ்ச்சியின் இடையில் திடுதிப்பென்று முதல்வருக்குக் கறுப்புக் கொடி காட்ட முற் ட்டது தவறுதான். ஆனால், அந்தத் தவறைச் செய்தவர்களை, வன்முறையைக் கையாண்டு தாக்குவதும் தவறே. அவ்வாறு தாக்கியவர்கள் தமது ஆதரவாளர்கள் என்றும் பாராமல், அவர்களை முதல்வர் கண்டனம் செய்திருந்தால், அவரது பெருமை உயர்ந் திருக்கும்.

வழக்கறிஞர்கள் அரசியலில் ஈடுபடக்கூடாது என்பதல்ல. ஆனால், அந்த உயர்ந்த தொழிலில் ஈடுபட்டுள்ளவர்கள் அரசியலையும் உன்னத நிலைக்கு உயர்த்த வேண்டும்; அதை விடுத்து, தங்கள் தொழிலின் கௌரவத்தையும் தாழ்த்தி, அரசியலையும் தரம் தாழ்ந்து போகச் செய்வது அவர்களுக்கு அழகல்ல. இதை முதல்வர் அச்சமின்றியும் தயக்கமின்றியும் சம்பந்தப்பட்டவர்களுக்கு உணர்த்தவேண்டும். உயர்நீதிமன்றத்தில் வழக்குகள் தமிழில் நடைபெறுவதைக் காட்டிலும் வழக்கறிஞர் தொழிலின் கண்ணியம் காப்பாற்றப்படுவது அதிமுக்கியம். ●

# ரெட்டச்சுழி

● ஈகோவால் முட்டிக்கொண்டு வீராப்புக் காட்டும் ரெண்டு பெரிசுகளால் இளசுகளின் காதல் என்னவானது? நின்றுபோகுமா... நிறைவேறுமா...? ரெட்டச்சுழி கதை டபுள் பழசுதான்.

● இறந்துபோன காதலியை நினைத்து பிரம்மச்சாரியாக வாழும் பாரதிராஜாவும், கௌரவம்தான் முக்கியம் எனக் கங்கணம் கட்டும் பாலசந்தரும், தாங்கள் ஏற்னெவே படங்களில் உருவாக்கி உலவவிட்ட கதாபாத்திரங்களின் சாயல்களில் டபுள் ஸ்ட்ராங்காக வார்க்கப்பட்டுள்ளார்கள்.

● இருவரையும் வகைதொகையில்லாமல் வேலை வாங்கியிருக்கும் இயக்குநர் தாமிராவின் தைரியத்துக்கு டபுள் பாராட்டு.

● ''நான் சொன்னாதான் தெரியுமா... என் கண்ணைப் பார்த்தாலே தெரியாதா?'' என நாயகி அஞ்சலி காதலில் உருகுவதும் மருகுவதும் கனகச்சிதம். அஞ்சலிக்கு முன்பு, புதுமுக ஹீரோ ஆரி காணாமல் போவது இரட்டிப்புப் பரிதாபம்.



● நீண்ட நாட்களுக்குப் பிறகு, கருணாஸின் காமெடி ரசிக்கும்படி இருப்பது இரட்டிப்பு மகிழ்ச்சி.

● கார்த்திக் ராஜா அமைத்திருக்கும் இசை இதம்தான். எனினும், எதற்கு இளையராஜா சாயல் இரண்டு மடங்கு தூக்கலாகத் தெரிகிறது!

● நல்லான்தமிழின் வசனம் இரண்டொரு இடங்களில் சிரிக்க வைக்கிறது.

● செழியனின் கேமராவில் கிராமத்துப் பசுமையும் புழுதியும் குணம் மாறாமல் பதிவாகியிருப்பது ட்வின் பியூட்டி!

● ரத்தம் தெறிக்காமல், வன்முறை முத்திரை விழாமல், நாற்பது வருடப் பகையை 'நச்'சுன்னு சொல்லியிருக்கும் இயக்குநர், 'நாடக' பாணியான க்ளைமாக்ஸை வைத்ததன் காரணமாக இரு மடங்கு வேகத்தில் சரிகிறது படம்.

● ரெட்டச்சுழி - ரசிகர்களுக்கு டபுள் பெனிஃபிட் இல்லாட்டியும் நல்ல விருந்து.

- மதிமாறன்

கோடை வெப்பம் பலரையும் குளிர்ப்பிரதேசங்களுக்கு விரட்டிக் கொண்டிருக்க, அக்னி நட்சத்திரத்தையும் பொருட்படுத்தாது, தஞ்சை அருகேயுள்ள மெலட்டூருக்கு, ஆண்டுதோறும் உள்ளூர், வெளியூர், வெளிநாடுகளிலிருந்து, கலை ஆர்வலர்கள் ஆவலுடன் வருகிறார்கள். சீறும் சிங்கம், ஆர்ப்பரிக்கும் அரக்கர்கள், மனத்தை நெகிழ்விக்கும் சந்த்ரமதி என, பல புராணக் காட்சிகள் பாகவத மேளா வைபவத்தில் அரங்கேறுவதைக் காணவே இந்த ஆர்வலர் கூட்டம்.


* அரிமுகம்

திண்ணைப் பேச்சு, மின்வெட்டு, நவீன வசதிக் குறைவு, உலுக்கி எடுக்கும் ரோடுகள் எனச் சராசரி கிராமத்தின் சகல லட்சணங்களும் பொருந்திய கிராமம் மெலட்டூர். ஆண்டுதோறும் மே மாதத்தில் ஒன்பது நாட்கள், நரசிம்ம ஜெயந்தியையொட்டி நடைபெறும் பாகவத மேளா நாடக மஹோத்சவத்தின்போது.. இவ்வூர் களைகட்டி நிற்கிறது.

அப்படி என்னதான் இருக்கிறது பாகவத மேளாவில் என்றால், ''வந்துதான் பாருங்களேன், அனுபவித்தால்தான் அருமை தெரியும்'' என்கிறார் மெலட்டூர் நடராஜன். இவர், இவ்வைபவத்தை நடத்தும் ஸ்ரீ லக்ஷ்மிநரசிம்ம ஜெயந்தி பாகவத மேளா நாட்டிய நாடக சங்கத்தின் தற்போதையத் தலைவர்.

பாகவத மேளா நாட்டிய நாடகமென்பது ஒரு பழம்பெரும் கலை. பக்தி, இசை, நாட்டியம், நாடகம் எனப் பலவிதப் பரிமாணங்களைக் கொண்டவை இந்நாட்டிய நாடகங்கள். பக்தியையே அஸ்திவாரமாகக் கொண்டு, இதிகாசப் புராணங்களிலிருந்து எடுக்கப்பட்ட கதைகளே நாட்டிய நாடகமாக்கப்பட்டு இறைவன் சன்னிதியில் அர்ப்பணிக்கப்படுகின்றன. தஞ்சையைச் சுற்றியுள்ள கிராமங்களில் பிரபலமாயிருந்த இக்கலை, தற்போது மெலட்டூரில் மட்டும் பல்வேறு தடைகளையும் தாண்டி உயிர்ப்புடன் இருக்கிறது. வருடாந்திர பாகவத மேளா உத்ஸவம் எழுபதாம் ஆண்டை நோக்கி நடைபோடுகிறது.

# வேர்களைத் தேடி



சங்கீத மும்மூர்த்திகளில் ஒருவரான தியாகராஜரின் காலத்தில் வாழ்ந்த வெங்கட்ராம சாஸ்திரி (1743-1809 கி.பி.) என்பவர் இயற்றிய நாட்டிய நாடகங்களே, மெலட்டூரில் வரதராஜ சுவாமி சன்னிதி முன் நடைபெறுகின்றன. இசை நயமும், பொருள் நயமும் மேலிட, நாட்டிய சாஸ்திரத்தின் அடிப்படையில் அமைந்தவை இந் நாடகங்கள். சாஸ்திரியின் 'ப்ரஹ்லாத சரித்திர நாட்டிய நாடகத்தைக் கண்ணுற்ற பின்பே, தியாகராஜர் 'ப்ரஹ்லாத பக்தி விஜயம்'' உருவாக்கினார் என்றும் கூறுவர்.

மேடையில் அப்போதைக்கப்போது தோன்றும் ரசம்மிக்க அபிநயங்கள், ச்ருங்கார பக்தி, நேர்த்தியான அடவுகள், கச்சிதமான ஜதிகளுமே இப்பாணியின் சிறப்பம்சம்.

வியாபார நோக்கின்றி ஒரு வாரம் முதல் பத்து நாட்கள் வரை நடைபெறும் இவ்விழாவில், ப்ரஹ்லாத சரித்திரம் கட்டாயம் இடம்பெறும். தவிர, வெங்கட்ராம சாஸ்திரியின் படைப்புகளிலிருந்து இரண்டு அல்லது மூன்று நாட்டிய நாடகங்கள் நடைபெறும். நவீன நாடகத் தொகுப்பான வள்ளித் திருமணம், கடைசி நாளன்று நடைபெறும். உள்ளூர்வாசிகளிடையே இது பெரும் ஹிட்.

இரவு பத்து மணியளவில் வரதராஜ சுவாமி கோயிலின் எதிரில் அமைக்கப்பட்ட மேடையில் துவங்கும் நிகழ்ச்சி, விடிய விடிய நான்கு மணி வரை நடைபெறும். சபா ஸீட் வசதிகள் கிடைக்காது. மர பெஞ்சுகளும், வீட்டுத் திண்ணை களும், தரையில் விரிக்கப்பட்ட விரிப்பு களும்தான் இருக்கைகள். கேன்டீன் எதுவும் இல்லை. இரவு கண் விழிக்க வசதியாக, டீ விற்பனை உண்டு. நாடகத்தைக் காண தொலை


சித்ரா மாலோலன்

கலைப் பயணம்

விலிருந்து வரும் விருந்தினர் அனைவருக்கும் விருந்தோம்பலாக தினமும் வடை பாயசத்தோடு உணவுண்டு.

நிகழ்ச்சிக்கு முன் ஒவ்வொரு நாளும் வரத ராஜ சுவாமி சன்னிதியில் வழிபட்டு மேடையேறுவார்கள் கலைஞர்கள். கோணங்கி பிரவேசத்தில் துவங்கும் நிகழ்ச்சி. சில ஸ்லோகங்களுக்குப் பின், கதைச் சுருக்கம். தொடர்ந்து, விக்னேஸ்வரர் வந்து கலைஞர்களையும், ரசிகர்களையும் வாழ்த்திச் செல்வார். பிறகு, ஒவ்வொரு கதாபாத்திரமும் தம்மை அறிமுகம் செய்து கொண்டபின் நாடகம் தொடரும்.

நிகழ்ச்சி முடிந்ததும், பஜனை இசைக்க, மீண்டும் வரதராஜர் கோயில் சென்று வணங்கி, கலைஞர்கள் ஊர்வலமாக வரும்பொழுது, ஒவ்வொரு வீட்டிலும் பின் இரவு எவ்வளவு மணியானாலும் ஆரத்தி எடுப்பார்கள்.

மேடையில் ப்ரஹ்லாதனாகவும், நரசிம்மனாகவும், முருகனாகவும், சாஸ்தாவாகவும் அரிதாரமிட்டு நடமிடும் கலைஞர்களுக்குள், அந்தந்த பாத்திரங்கள் ப்ரத்யக்ஷமாகவே பிரதிபலிக்கின்றன. ப்ரஹ்லாத சரித்திரத்தில் நடைபெறும் நரசிம்மாவதாரக் காட்சியே இதற்குச் சான்று. அது ஒரு



**முன்பொருமுறை நரசிம்ம வேடமிட்டவர் ஒருவரை ஏறத்தாழக் கிழித்தெறிந்த சம்பவமும் உண்டு.**

மெய்சிலிர்ப்பூட்டும் அனுபவம்.

நரசிம்மஸ்வாமி வேடம் தரிப்பதற்கான அரிமுகம் கொண்ட முக அணி, பல நூறு வருடங்களுக்கு முற்பட்டது. வரதராஜ சுவாமி கோயிலில் இந்த முக அணிக்கு தினமும் பூஜை நடைபெறுகிறது. நாடக தினத்தன்று நரசிம்மாவதார நிகழ்வுக்குச் சற்று முன், கோயிலிலிருந்து அந்த அரிமுகத்தை மல்லாரி (நாதஸ்வர ஜதி இசை) இசைக்க, வேத கோஷத்துடன் ஊர்வலமாக எடுத்துவரும் காட்சி கண்கொள்ளாக் காட்சி. அந்த அரிமுகத்தை அணிந்த மறுகணமே, நரசிம்ம ஸ்வாமி ப்ரத்யக்ஷமாக வந்துவிடுவார். தூண் பிளந்து, ஆவேசம் பொங்க ஹிரண்யனை வதைக்க விரையும் அவரை, நான்கைந்து பேர் பிடித்துக் கொள்வார்கள். முன்பொருமுறை, நரசிம்ம வேடமிட்டவர் ஒருவரை ஏறத்தாழக் கிழித்தெறிந்த சம்பவமும் உண்டு!

நடனக் கலைஞர்கள், இசைக் கலைஞர்கள் என்று.... நாற்பது பேர் கொண்ட குழுவில் அனைவருமே ஆண்கள். ஆண்களே பெண் வேடமிட்டு அசத்துவர். இந்தியா மற்றும் வெளிநாடுகளில் வாழும் இக்கலைஞர்கள், இந்த விழாவுக்காக ஒன்றுசேர்கிறார்கள். ஒத்திகை பார்ப்பதும்

கிடையாதாம். சிறு வயதிலிருந்தே மெலட்டூர் பாணியில் பயிற்சி பெற்ற இவர்கள், விழா நடக்கும் சமயம் ஒருமுறை, 'ரஷ்' பார்ப்பார்கள் அவ்வளவே!

இவ்வருடம், 'அபய்' என்கிற இந்திய பரதக் கலைஞர்களின் கூட்டமைப்பின் சார்பில், இரண்டு நாட்கள் மெலட்டூர் பாணி பற்றிய பயிற்சி வகுப்புகள் இங்கு நடைபெறுகின்றன. இவ்வூர்சார்ந்த கலைஞர்களிடமே இக்கலையைப் பற்றித் தெரிந்து கொள்ளும் அரிய வாய்ப்பிது.

மேடைகளில் நாம் இன்று கோயில்களையும் பழைமையையும் சித்திரிக்க முயன்று கொண்டிருக்க, அந்தப் பழைமையான சூழலிலேயே இக் கலையை, மிளிர்வும், சுவாரஸ்யமும் குன்றாது படைக்கின்றனர் மெலட்டூர்பாணிக் கலைஞர்கள்.

நடராஜன் கூறுவது போல, "இது வெறும் பொழுதுபோக்கல்ல; ஒரு தெய்வீகப் பயணம்!"

மெலட்டூர்

எங்கே - தஞ்சையிலிருந்து 18 கி.மீ. தொலைவில், திட்டை மார்க்கமாக கும்பகோணம் போகும் வழியில் உள்ளது.

எப்படி - தஞ்சை வரை ரயில் பயணம். அங்கிருந்து பஸ் அல்லது டாக்ஸி மூலம் செல்லலாம்.

எப்பொழுது - 2010 மே 19 முதல் மே 27 வரை.

என்ன - ப்ரஹ்லாத சரித்திரம், ஹரிச்சந்த்ரா, ஹரிஹர லீலா விலாஸம், வள்ளித் திருமணம் நடைபெறும். தவிர, பிற கலைஞர்களின் நிகழ்ச்சிகளுமுண்டு.

**மேலும் விவரங்களுக்கு மின்னஞ்சல்:**
melattur.bhagavatamela@gmail.com

யாருமற்ற அந்த ரோட்டின் ஒரு திருப்பத்தில், காரை, அங்கிருந்த ஒரு முள் செடியின் பின்புறம் மறைத்தபடி நிற்க வைத்துவிட்டு, வெளியே வந்து சுற்றும் முற்றும் பார்த்தான். பார்ப்பதற்கு கட்டுமஸ்தாக இருந்தான். அந்த மாலை வேளையில் அவன் மாட்டியிருந்த கூலிங் க்ளாஸ் கொஞ்சம் அசாதாரணமாய் இருந்தது. ஹைவேயிலிருந்து டைபாஸாய் பிரியும் அந்த ரோட்டி

# அப்துல்லா, சிவா

லிருந்து, நடுவே நின்றபடி மெயின் ரோட்டை பார்த்தான். மெல்ல காரின் பின்னால் வந்து, டிக்கியை திறந்து அதிலிருந்த ஒரு பெரிய பாறாங்கல்லை தம்பிடித்துத் தூக்கி எடுத்துக் கொண்டு வந்து நடுவில் வைத்தான். அதற்குப் பக்கத்தில் ஒரு குட்டிக் கால்வாய் பிரிட்ஜ். அதற்கான மேடையின் பின்புறம் தரையில் ஒளிந்தபடி உட்கார்ந்து, பின்பக்கத்திலிருந்து ஒரு ரிவால்வரை எடுத்துப் பார்த்து, "சிவா.. உனக்காக.." என்றான் அப்துல்லா.

● ● ● ●

"டமால்" என்ற வெடிச்சத்தம் கேட்டதும் உடல் அதிர, அனிச்சையாய் கால் பிரேக்கை அழுத்த, கார் அலைக்கழிந்து, தரையெங்கும் டயர் மார்க்காய் தேய்த்து நிற்க, சிவாவுக்கு உடலெல்லாம் வியர்த்து வழிந்தது. ஒரு நிமிடம் வெடித்தது கார் டயர்தானா அல்லது துப்பாக்கியா என்று ஒருகணம் உடலைத் தடவிப் பார்த்துக் கொண்டான். சாகவில்லை.. நல்லவேளை என்று நினைத்து சுற்றும் முற்றும் பார்த்தபடி காரிலிருந்து கீழிறங்கினான். காரின் முன்பக்க டயர் வெடித்திருந்தது. நடந்தது சரியான விஷயமாய்ப்படவில்லை. இதயத்தின் துடிதுடிப்பு அவனுக்குக் கேட்டது. ஏதோ தவறு நடக்கப் போகிறது என்று உள்ளுணர்வு சொல்லியது. வேறு வழியில்லை. ஸ்டெப்னியை மாற்றியாக வேண்டும். சீக்கிரம் பண்ணை வீட்டிற்குப் போயாக வேண்டும். அந்த இடம்தான் அப்துல்லாவிற்கு தெரியாது. இரண்டு நாள் அங்கேயே ஒளிந்து, நிலவரம் தெரிந்து கொண்டு, அப்படியே பம்பாய், மலேசியா என ரீனாவுடன் பறந்துவிட வேண்டும் என்று மனதினுள் பல விஷயங்கள் ஓட, டிக்கியைத் திறந்து ஜாக்கியை எடுத்து மாட்டலானான் சிவா.

● ● ● ●

சிவாவுக்காகக் காத்திருப்பது அப்துல்லாவுக்கு புதிதல்ல. ஆனால், இம்முறை அவனைக் கொல்வதற்காகக் காத்திருப்பது புதிதுதான். எப்பவுமே சொன்ன நேரத்துக்கு வரமாட்டான். எவ்வளவு நம்பினேன். இத்தொழிலில் நம்பிக்கை மட்டுமே நிலையானது. அது குலைந்தால் அவ்வளவுதான். முடிந்தது. எல்லாமே முடிந்தது; நம்பிக்கைத் துரோகம் செய்தவனுக்கு மரணத்தைத் தவிர வேறு தண்டனையில்லை. பணம் மட்டுமே என்றால் பரவாயில்லை. ரீனா.. எப்படி வைத்திருந்தேன் அவளை ராணி போல.. எது சொன்னாலும், கேட்டாலும் அடுத்த நொடியே... எவனுக்கும் வணங்காத இந்த அப்துல்லா, அவளிடம் மண்டியிட்டிருக்கிறேன். அவளின் கால்களை முத்தமிட்டிருக்கிறேன். அவளுக்காக, அவளுடைய அழகுக்காக, அதை ஒருமுறையாவது தீண்டுவதற்காக.

சங்கர் நாராயண்

அடித்துப் பிடித்துப் பறித்திருக்க முடியும் அவளை. ஆனால் பிடிக்கவில்லை. மெல்ல... மெல்ல.. ரசித்து ருசித்து அனுபவிக்க வேண்டிக் காத்திருந்தவன். இப்போ என் பணத்தையும் சுருட்டிட்டு என் ரீனாவையும் தட்டிப் போவது என்ன நியாயம்..? சிவா நீ செய்த துரோகத்துக்கு சாவுதான் உனக்கு சரி.. வா.. வா.. வா..

• • • •

# டேனியல்

## ஒரு க்ரைம் டிராவல்

**ஜா**க்கியை ஏத்தி ஸ்டெப்னியை எடுத்து மாட்ட ஆரம்பிப்பதற்குள், முழுவது மாய் நனைந்திருந்தான். அவன் நனைந் திருந்தது ஸ்டெப்னியை மாற்றியதால் அல்ல, அப்துல்லாவை நினைத்து. ரீனாவுக்காக எதை வேண்டுமானாலும் செய்யத் தயாராக இருந்த வன். ஆனால் ரீனாவுக்கு அவனை பிடிக்க வில்லை. சிவாவைத்தான் பிடித்திருந்தது. அவள் மீது தனக்குத் திடீரென்று இப்படி யொரு காதல் வருமென்று தெரியவில்லை. காதலுக்குக் கண்ணில்லை. அதனால், நண்ப னும் தெரியவில்லை. ரீனாவை அடைய வேண்டுமென்றால் பணம் வேண்டும். பெரிய அளவில் வேண்டும். அதற்கு ஒரே வழி டபுள்



கிராஸிங்தான். டபுள் கிராஸிங் என்றால் என்னவென்று தெரியாதவர்களுக்கு இப்போது சொல்லிப் புரியவைக்க நேரமில்லை அவனுக்கு.

பின் பக்க சீட்டுக்கு அடியில் உள்ள பத்து கோடிக்கான பச்சை டாலர் நோட்டை எப்படி மாற்றுவது என்ற யோசனையுடன் ஸ்டெப்னி மீது எடுத்து ஒவ்வொரு போல்ட்டாக சிவா மாட்ட ஆரம்பித்த நேரத்தில், தூரத்தில் ஒரு புல்லட் வரும் ஓசை கேட்க, பதற்றம் அதிகமாகி, கட கடவென போல்ட்டை டைட் செய்ய ஆரம்பித்தான். சத்தம் மெல்ல அருகே வர வர முகம் முழுவதும் ஹெல்மெட்டை மாட்டி மறைத்தபடி ஒருவன் வருவது தெரிய, பதற்றத்தோடு எல்லா உபகரணங்களையும் எடுத்து அள்ளி டிக்கியில் போட்டு மூடிக் காரை கிளப்ப, அந்த புல்லட் சிவாவை க்ராஸ் செய்து போனது.

சிவா சின்னதாய்ப் பெருமூச்சு விட்டான். நல்லவேளை! நம்மைத் தீர்த்துக்கட்ட வந்த ஆள் இல்லை. இம்மாதிரியான நேரங்களில், யாரைப் பார்த்தாலும் உள்ளுக்குள் குளிரெடுக்கத்தான் செய்கிறது. இன்னும் பத்து கிலோமீட்டர்தான்; மெயின் ரோட்டிலிருந்து பைபாஸில் நுழைந்த ஐந்தாவது நிமிடத்தில் பண்ணை வீடு. அங்கே எனக்காக காத்திருக்கும் ரீனா. இரண்டே நாள்! அவ்வளவுதான், 'சொய்ங்' என்று பறந்துவிட வேண்டும் என்று யோசித்தபடி, காரின் ஆக்ஸிலேட்டரை அழுத்த, கொஞ்ச நேரம் முன்னால் போன புல்லட் தெரிந்தது.

● ● ● ●

அப்துல்லாவுக்கு எரிச்சலாய் இருந்தது இந்நேரத்திற்கு வந்திருக்க வேண்டும். நரசிம்மிடமிருந்து ஏற்கனவே தகவல் வந்திருந்தது. சென்னையிலிருந்து சிவா காரில் கிளம்பியவுடன், அவன் தகவல் சொல்லிவிட்டான். முடிந்தால் காரை பின் தொடரச் சொல்லியிருக்கிறேன் பைக்கில். கார், பைக், இரண்டின் வேகத்திற்கும் நிறைய வித்தியாசம்



"எவனுக்கும் வணங்காத நான் அவளிடம் மண்டியிட்டிருக்கிறேன்"

இருந்தாலும், வேறு வழியில்லை. யாரை, யாவது நம்பித்தான் ஆகவேண்டியிருக்கிறது. பின் ஏன் வரவில்லை. பண்ணை வீட்டுக்கு போய்த் தன்னை ஏமாற்றிய அவளைச் சுவரில் நங்நங் என்று அடித்துக் கொல்ல வேண்டும். இரு, பொறுமையாய் இரு.. முதலில் துரோகம் செய்த நண்பன், பின்புதான் அவனைத் தூண்டியவள். இன்னும் கூட அவளுக்காக ஒரு சின்ன சாப்ட் கார்னர் மனதுள் இருப்பதை நினைத்து, இந்த நேரத்திலும் சிரித்தான்.

● ● ● ●

முன்னால் போன புல்லட்டைப் பார்த்ததும் மீண்டும் முதுகில் ஜில்லிப்பை உணர்ந்தான் சிவா. "சே.. இது நம் பிரமை. அவன் யாரோ.. அவன் என்னை குறிவைத்திருந்தால் ஸ்டெப்னி போடும்போதே செய்திருக்க முடியும்" என்று எண்ணிக் கொண்டே மேலும் வேகமாய் அவனை ஓவர் டேக் செய்தபோது, புல்லட்காரன் தன்னைத்தான் வேவு பார்க்கிறான் என்று தெரிந்தது. மேலும் வேகத்தை கூட்டிப் பறந்தான். அவனை விட சடுதியில் நூறு மீட்டர் வந்துவிட, ரியர்வியூவில் பார்த்த போது, அவன் இன்னும் வேகத்தில் பின்

தொடர்வது தெரிந்தது. ஒருவேளை சும்மா விளையாட்டு காட்டுகிறானோ.. இம்மாதிரி ஹைவேயில் எல்லாம் பைக் ஓட்டுபவர்கள் கார் ஓட்டுபவர்களிடம் விளையாடுவார்கள். சிவா மெல்ல வேகத்தைக் குறைத்துவிட்டு மீண்டும் ரியர் வியூவில் பார்க்க, அவனும் கொஞ்சம் வேகத்தைக் குறைத்து மெல்ல நெருங்க, அவன் கைநீட்டி நில் என்பது போல சைகையைக் காட்ட, அதை பார்த்ததும் வேகத்தை அதிகப்படுத்தி ஏற, அவனும் தொடர்ந்தான்.

இன்னும் ரெண்டே கிலோமீட்டர்தான். பண்ணை வீடு வந்து விடும். ரியர்வியூவில் பார்க்க... பைக்.. துரத்திக் கொண்டிருந்தது தெரிந்தது.

• • • •

**தூ**ரத்தில் வண்டி வரும் சத்தம் கேட்டதும் அப்துல்லா அலர்ட் ஆனான். துப்பாக்கியைத் தயார்ப்படுத்தி அந்தக் கால்வாய் பிரிட்ஜில் ஒளிந்தான். வா.. சிவா.. வா..

• • • •

**து**ரத்துவது தன்னைத்தான் என்று சிவாவுக்கு இப்போது புரிந்து விட்டது. நிச்சயம் அப்துல்லா மோப்பம் பிடித்துவிட்டான். அவன் ஆள்தான்! வேறு வழியில்லை. பின்னால் பைக்கும் துரத்த, வேகத்தைக் குறைக்காமல் அப்படியே அந்தச் சின்ன ரோடில் திருப்ப, திரும்பிய வேகத்தில் நடுரோட்டில் இரு பெரிய கருங்கல்லை பார்த்ததும், சட்டென்று என்ன செய்வது என்று தெரியாமல், ப்ரேக்கின் மீது காலை வைப்பதற்கு பதிலாய் மீண்டும் ஆக்சிலேட்டரை அழுத்த, காரின் முன்பக்க சக்கரம் அந்த கருங்கல்லின் மீது மோதி ஒரு பக்க வீல் மட்டும் வண்டியை விட்டுப் பிரிந்தோடியது. வண்டி நிலையிழந்து கொஞ்சம் அந்தரத்தில் பறந்து, நேராய் அந்தக் கால்வாய் பிரிட்ஜின் மீது பெரிய சப்தத்துடன் விழுந்த வேகத்தில், மொத்தக் கால்வாயும் உடைந்து தூளாகியது.

• • • •

**பி**ன்னாலேயே துரத்தி வந்த பைக்காரன் வண்டியை நிறுத்திவிட்டு பரபரப்பாய் ஓடி வந்து பார்த்தான். காரின் டிரைவர் சீட்டில் ஒருவன் ஸ்டியரிங் மார்பில் இறங்கி இறந்திருந்தான்; காருக்கு அடியில் கூலிங்கிளாசோடு ஒருவன் கால்வாய் இடிபாட்டோடு நசுங்கியிருந்தான். அவனருகே துப்பாக்கி அனாதையாய்க் கிடந்தது. என்ன செய்வதென்று தெரியாமல், ஒருகணம் நின்றவன் கண்களில், ரோட்டோரத்தில் இருந்த ஒரு ப்ரீப்கேஸ் கண்ணில் பட்டது.

மெல்ல வந்து அதைத் திறந்து பார்த்தான். கட்டுக்கட்டாய் டாலர்கள். மெல்ல சுற்றும் முற்றும் பார்த்துவிட்டு பெட்டியை எடுத்து முன்னால் வைத்துக் கொண்டு வண்டியை ஸ்டார்ட் செய்தான். சத்தமாய் "ஏகவே" என்றான். பின்பக்கம் டிக்கி திறந்திருக்கிறது என்று சிவாவுக்கு சொல்வதற்காகவே தொடர்ந்து காரைத் துரத்தி வந்த டேனியல். ●



"எங்கம்மாவை வீட்டை விட்டுப் போன்னு சொன்னியாமே?"
"அப்படியெல்லாம் மரியாதை இல்லாம சொல்வேனா? 'போங்கன்னு'தான் சொன்னேன்."
- ஜி.வி.கபாஷ், சேலம்-1

# இயக்குநர் பாலா

'சேது'வில் தொடங்கி, 'நான் கடவுள்' வரை... திரைப்படத் துறையில் புத்தம் புதிய ஆளுமையை யதார்த்தமாய் வெளிப்படுத்திய இயக்குநர் பாலாவின் பலம், பலவீனத்தை அவரது நண்பரும், பத்திரிகையாளருமான ஜெ.பிஸ்மி பட்டியலிடுகிறார், ''இது எங்கள் நட்பின் மீதான நம்பிக்கை மற்றும் அவரின் அடுத்தகட்ட வளர்ச்சிக்கான வரைபடம்'' என்ற முன்னுரையோடு...

### ப்ளஸ்

● புத்தகங்கள் வாசிப்பது அவருக்கு ஒரு தவம் (முன்பு)

● வெளிநாட்டு டிவிடிகளிலிருந்து கதையை உருவாமல், (திருடாமல்) தன்னைச் சுற்றியுள்ள யதார்த்தத்திலிருந்து கதையைச் செதுக்குவது.

● படப்பிடிப்பின் போது வெளிப்படும் ஆளுமை.

● முன்னணி நடிகர்களைப் பெயர் சொல்லி ஒருமையில் அழைத்து வேலை வாங்குவது.

● நடிகர்களுக்கு இப்படி நடிக்க வேண்டும் என்று நடித்துக் காட்ட மாட்டார். அவர்களைப் பலவிதங்களில் நடிக்கவைத்துத் தேவையானதை எடுத்துக் கொள்வார். இந்த யுக்தியால் நடிகனின் நடிப்பாளுமையை வெளிக்கொணர்வது.

● சினிமா வெளிச்சம் படாத புதுமுகங்களைத் துணிந்து நடிக்க வைப்பது.

● தம்மை ஒத்த சிந்தனை உடையவர்களிடம் மட்டுமே, தம் கருத்தை, விருப்பத்தைப் பகிர்ந்துகொள்வது.

### மைனஸ்

● கதைத் தேடல் என்ற பெயரில்... ஒரு படத்துக்கும் இன்னொரு படத்துக்குமான இடைவெளியை மிக அதிகம் வைத்து அலைவது.

● தப்பானவர்களையும் உடனே நம்பி அருகில் வைத்துக் கொள்வதும், அவர்களைத் தலைமேல் தூக்கிவைத்துக் கொண்டாடுவதும், உண்மை தெரியவருகையில், மிகுந்த வருத்தப்படுவதும்.

● யாருடனும் ஒட்டாமல் தனித்திருப்பது

● பல இழப்புக்களைத் தந்த முன்கோபம்

● உதவி இயக்குநர்களை வருங்கால இயக்குநராகப் பார்க்காமல், எடுபிடி போல் நடத்துவது. (இதை அவரிடம் உதவி இயக்குநராக இருந்த இன்றைய இயக்குநர் அமீர் ஆமோதிக்கிறார்)

● சமீபகாலங்களில் புத்தகங்கள் வாசிப்பதை நிறுத்திக் கொண்டது.

● பலமான கதையை பலவீனமான திரைக்கதையால் நீர்த்துப் போகச் செய்வது. அதனாலேயே கமர்ஷியல் பயத்துக்குப் பணிந்து விடுவது.

(பிதாமகனில் சிம்ரன் ரெக்கார்டு டான்ஸ்)

● திட்டமிட்டபடி படத்தை முடிக்காமல் வருடக்கணக்கில் இழுத்தடிப்பது.

● ஒரு கலைஞனான இவர் தற்போது தயாரிப்பாளராக மாறி இருப்பது.

– ஜெ.பிஸ்மி



# கமர்ஷியல் பயம்-
# கலைஞனின் சறுக்கல்!



[+] ப்ளஸ் [-] மைனஸ்
= பெரும்புள்ளி

**நா**கர்கோயிலில் ஒரு பேக்கரியில் பொருட்களை வாங்கியபோது, பேப்பரில் கட்டிக் கொடுத்தார் அதன் உரிமையாளர். ''ஏம்பா கேக், பிஸ்கட், வாங்கினா, மளிகை சாமான் மாதிரி பேப்பர்ல இப்படி மடிச்சித்தர்றீயே? பிளாஸ்டிக் கேரிபேக்குல மாடர்னா போட்டுக் குடு'' என்று கேட்டபோது, ''ஏம்மா, ஊருக்கு புதுசா. இது மெட்ராஸ் இல்லே. நாங்க மாடர்னா பிளாஸ்டிக்கில் கொடுத்தா மாமனார் வீட்டுக்கு போயிட்டு வந்தா மாதிரி நம்மள ஒதுக்கிடுவாங்க. செக்கிங்குக்கு அந்த கலெக்டர் ஜீப்ல வருவாரா? இல்ல பர்தா போட்டு பொம்பள மாதிரி வருவாரான்னு தெரியாது. உனக்கு பை வேணும்னா துணிப்பையோ பேப்பர் பையோ தனியா வாங்கிக்க. பிளாஸ்டிக் பை இந்த மாவட்டத்திலேயே கெடைக்காது'' என்றார்.

பிளாஸ்டிக் பைகளை ஒதுக்கிய மாவட்டமா? அதிசயத்தோடு விசாரித்தோம். வீதிவீதியாய்ப் பார்த்தோம். டீக்கடையிலிருந்து பெரிய மளிகைக் கடை வரை, கறிக்கடையிலிருந்து கடற்கரை வரை எங்கும் ஒரு துண்டு பிளாஸ்டிக்கும் கண்ணில் படவில்லை. இந்த அதிசயத்தை எப்படி சாத்தியமாக்க முடிந்தது என்று மாவட்ட கலெக்டரை சந்தித்துக் கேட்டபோது...

''நம்மைத் தாங்கி வளர்க்கும் இந்தப் பூமி நமது ஆதி தாய். நாம் அதன் புதல்வர்கள் அல்லவா? பூமி அழிவது மனித இனத்தின் அழிவுதானே? பூமி வெப்பமயமாவதைத் தடுக்க, மண் அதன் வளத்தை இழக்காமல் இருக்க, நம்ம சனங்க கேன்சர், டி.பி. என்று அவதிப்படாமலிருக்க, எனக்கான அதிகாரத்தைக் கொண்டு, என்னால் முடிந்ததைச் செய்ய முயன்றேன். அதுதான் பிளாஸ்டிக் ஒழிப்புப் போராட்டம்'' என்கிறார் மாவட்ட ஆட்சியர் இராஜேந்திர ரத்னா ஐ.ஏ.எஸ்.

ராஜஸ்தானைச் சேர்ந்த இந்த கலெக்டர் கொஞ்சிக் கொஞ்சித் தமிழ் பேசுகிறார். ''என்னோடு என் சகாக்களும், தொண்டு நிறுவனங்களும், மக்களும் சேர்ந்தே உழைத்தனர்''




என்றவரிடம் எதிர்ப்பே இல்லையா? என்றதும், ''ஏன் இல்லை? முதலில் வியாபாரிகள்தான் எதிர்த்தார்கள். நிலைமையை பேசிப்பேசிப் புரிய வைத்தோம். மறுத்த வியாபாரிகளுக்கு 1000 ரூபாய் வரை அபராதம் போட்டோம். பொது இடத்தில் பிளாஸ்டிக் போடும் மக்கள் மீதும் நடவடிக்கை எடுத்தோம்'' என்றார்.

வேறு என்னென்ன வழியில் போராடி இந்தப் பிளாஸ்டிக் உபயோகத்தை மாற்றினீர்கள் என்றோம். அவர் பட்டியலே போடத் தயார் ஆனார்...

1) 1,80,000 லோகோக்கள் மாவட்டம் முழுதும் ஒட்டினோம்.

அறிவிப்பு ஸ்க்ரோலிங் ஓடிக் கொண்டே இருக்கும்படி ஏற்பாடு நடந்தது. 5) ஒவ்வொரு கல்லூரியிலிருந்தும் 250 மாணவர்கள் மூலம் வீடு வீடாகப் பிரசாரம் செய்தோம்.

6) மக்களைக் கொண்டே பிளாஸ்டிக் கழிவுகளைச் சேகரிக்க ஏற்பாடு செய்தோம். இதனால், 20 டன் பிளாஸ்டிக்கை 10 லாரிகளில் சேமித்து சிமெண்ட் ஃபாக்டரிக்கு அனுப்ப முடிந்தது.

இப்படி பிளாஸ்டிக்கைத் தடை செய்தால் மாற்றுப் பொருள் வேண்டுமே? அதற்காக மகளிர் சுய உதவி குழுக்களுக்கு காகிதப்பை, துணிப்பைகளை



# பிளாஸ்டிக்குக்கு தடா!

இதில் எந்த வாகனமும் தப்பவில்லை. 2) அகில இந்திய வானொலியில் பதினைந்து நிமிடங்களுக்கு ஒருமுறை பிளாஸ்டிக் உபயோகத்துக்கு எதிராக, பிரசாரம் ஒலிக்க ஏற்பாடு செய்தோம். 3) மூன்றரை லட்சம் பி.எஸ்.என்.எல். செல் போன்களில் எஸ்.எம்.எஸ். வந்துகொண்டே இருந்தது. ஒன்றரை லட்சம் லேண்ட் லைன்களில் வாடிக்கையாளர்கள் பேச ஆரம்பிக்கும் போது, பிளாஸ்டிக் ஒழிப்பு கோஷம் ஒலிக்கும்படி செய்தோம்.

4) உள்ளூர் டீ.வி. சேனலில்



* இராஜேந்திர ரத்னா

மலிவாய்ச் செய்யும் பயிற்சியும், தொழில் துவங்க ஊக்கமும் தந்தோம். இப்போது ஆயிரக்கணக்கான பெண்கள் 100 முதல் 150 வரை தினமும் சம்பாதிக்க, இந்த பிளாஸ்டிக் ஒழிப்புதான் வழி செய்து தந்துள்ளது என்றார் கலெக்டர்.

பூமித்தாயை கௌரவப்படுத்திய அந்த தூயவருக்கு ஒரு நெஞ்சார்ந்த சல்யூட் வைத்துத் திரும்பினோம். இந்த 'தில்' எல்லா மாவட்ட ஆட்சியர்க்கும் இருப்பின் நல்லது.

– ஆர்.பாலா, கோவை

இந்தியாவின் மற்ற எந்தப் பகுதிகளுக்கும் சவால் விடும் அளவுக்கு இயற்கை அழகு மிகுந்தவை ஏழு சகோதரர்கள் என அழைக்கப்படும் வட கிழக்கு மாநிலங்கள். இந்திய சுற்றுலா வளர்ச்சிக் கழகம், சுற்றுலாப் பயணிகளை அதிக அளவில் ஈர்ப்பதற்காக,




# காட்டு வேர்ப்பாலமும் காமாக்கியா அம்மனும்

வட கிழக்கு இந்தியாவுக்கான சிறப்புத் திட்டம் ஒன்றைச் செயல்படுத்தி வருகிறது. நபார்டு வங்கியின் கவுஹாத்தி (அஸ்ஸாம்) பிராந்திய அலுவலகத்தில் பணிபுரிந்த சோமசுந்தரமும், ஷில்லாங் (மேகாலயா) அலுவலகத்தில் பணியாற்றிய பாலசந்திரனும் தங்களுடைய மூன்றாண்டுகால வட கிழக்கு இந்திய அனுபவங்களைப் பகிர்ந்துகொள்கிறார்கள்.

அஸ்ஸாம் மாநிலம் கவுஹாத்தியில் உள்ள காமாக்கியா கோயில், சக்தி பீடங்களில் ஒன்று. இங்கே வந்து வழிபட்டால் குழந்தை பாக்கியம் கிடைக்கும் என்பது நம்பிக்கை. கவுஹாத்திக்கு வந்துவிட்டு காமாக்கியா கோயிலுக்குச் சென்று வழிபடாமல் திரும்பிவிட்டால், அவர்களை அம்மன் இன்னொரு முறை கவுஹாத்திக்கு வரவழைத்து விடுவாள் என்பது இன்னொரு ஐதீகம்.

நம் நாட்டில் ஆண் பெயரில் அழைக்கப்படும் ஒரே நதியான பிரம்மபுத்ராவை பிப்ரவரி மாத மழை சீசனில் பார்க்க வேண்டுமே! கடல் போலக் கரை புரண்டு ஓடும்! கோடை சீசனிலோ தண்ணீர் வெகுவாகக் குறைந்து, ஆற்று மணலில் சிறுவர்கள் கால்பந்து ஆடுவதைப் பார்க்கலாம்.

அஸ்ஸாம் மாநிலத்தில் மட்டுமின்றி

வடகிழக்கு மாநிலங்கள் அனைத்திலுமே அடர்த்தியான காடுகளைக் காணலாம். அஸ்ஸாமில் இருக்கும் மானஸ், பபிதோரா, காசிரங்கா ஆகிய மூன்று வனவிலங்கு சரணாலயங்களும் அற்புதமானவை. காட்டுக்குள் ஜீப்பில் சென்று விலங்குகளைப் பார்க்க முடியும் என்றாலும், யானை மீது சவாரி செய்தபடி சென்று மிக அருகில் ஒற்றைக் கொம்பு காண்டா மிருகத்தைப் பார்க்கிற 'த்ரில்' வேறு எங்கும் கிடைக்காது!



மேகாலயா, முழுக்க முழுக்க பழங்குடி இனத்து மக்கள் வசிக்கும் மலைப் பிரதேச மாநிலம். அங்குள்ள சிரப்புஞ்சியில்தான் உலகிலேயே அதிகமான மழை பொழிவதாகப் பதிவாகி இருக்கிறது. ஆனால், சமீபகாலமாக மவுன்சின்ராம் என்ற இடத்தில்தான் அதிகமாக மழை பொழிகிறது என்று சொல்லப்படுகிறது. அதிகாரபூர்வமான அறிவிப்பு இன்னும் வெளியிடப்படவில்லை. இடையில் ஒரு பள்ளத்தாக்கு கொண்ட இரு மலைப் பகுதிகளில், ஒன்றின் உச்சியில் சிரப்புஞ்சியும், இன்னொன்றின் உச்சியில் மவுன்சின்ராமும் உள்ளன. இங்கிருந்து அங்கே செல்ல மலைப்பாதையில் 40 கி.மீ. பயணம். மவுன்சின் ராமில் உள்ள இன்னொரு டூரிஸ்ட் அட்ராக்ஷன் வெந்நீர் ஊற்றுகள்.




சிரப்புஞ்சியிலிருந்து சுமார் 20 கி.மி. தூரத்தில் உள்ளது சிரா ரிசார்ட். அதை நடத்துபவர் மேகாலயா பெண்மணியை மணந்து கொண்ட மதுரைக்காரத் தமிழரான டென்னிஸ். மலை உச்சியில் அமைந்துள்ள சிரா ரிசார்ட்டிலிருந்து பார்த்தால், ஒரு பக்கம் அழகான மலைப் பகுதி. இன்னொரு பக்கம் பங்களாதேஷ் தெரியும். அங்கே சுண்ணாம்புப் படிமங்களாலான மலைப் பகுதிகளில் ஆழமான குகைகளும் உண்டு. அயல்நாட்டு டூரிஸ்ட்கள் இந்தக் குகைகளைக் காண அதிகமாக வருகிறார்கள்.

மேகாலயாவின் காடுகளில் ஏராளமான சிற்றோடைகளைப் பார்க்கலாம். அவற்றைக் கடக்க இயற்கையாகவே மரங்களின் வேர்களும், விழுதுகளும் பின்னிப் பிணைந்து பாலம்போல அமைந்துள்ளன. ஒரு சில இடங்களில் இரட்டை அடுக்கு வேர் பாலங்களைக் கூடக் காணலாம். இந்தப் பகுதிகளில் மலையேற்றம் மிகவும் பிரபலம்.

சிக்கிம் மாநிலத்தில் மிலி என்ற இடத்தில், காட்டாற்றில் திகிலுடன் படகோட்டும்' ரிவர் டிராஃப்டிங்க்' மிகவும் பாபுலரான ஒரு சாகஸ விளையாட்டு.


சோமசுந்தரம்

அஸ்ஸாமிலிருந்து மேகாலயா செல்லும் சாலையில், கானாபாரா என்ற இடத்திலிருந்து சாலையின் இடது புறம் அஸாம்; வலது புறம் மேகாலயா. சாலையின் வலதுபுறத்தில் வரிசையாக பெட்ரோல் பங்க்குகளும், 'மதுபானக் கடைகளும் இருக்கும். இடது புறம் மற்ற கடைகள் இருக்கும். காரணம் அஸ்ஸாமை விட மேகாலயாவில் பெட்ரோல் மற்றும் மதுபானங்களின் விலை குறைவு.

ஜம்மு, டார்ஜிலிங்கிற்கு இணையானது அருணாசலப் பிரதேசத்தில் உள்ள தவாங். கடல் மட்டத்திலிருந்து 15 ஆயிரம் அடி உயரத்தில் உள்ள செல்லா கணவாயின் வழியாகச் சென்று, மீண்டும் கீழிறங்கினால் 13 ஆயிரம் அடி உயரத்தில் இருக்கிறது தவாங். அங்கே மார்ச் மாதத்தில் சாலைகளில் ஆறு அடி உயரத்துக்குப் பனி மூடி இருக்கும்; ராணுவ வாகனங்கள் பனியை அகற்றியபடி முன்னே செல்ல, மற்ற வாகனங்கள் பின்னால் அணி வகுத்துச் செல்லும்.

தவாங் செல்லும் வழியில் ஜஸ்வந்த் நகர் இந்திய ராணுவ சரித்திரத்தில் இடம் பிடித்த ஒரு இடமாகும். இந்தோ-சீனா போரின்போது ஜஸ்வந்த்சிங் என்ற இந்திய ஜவான் தனி ஒரு மனிதராக இதே இடத்தில் இரண்டு நாட்கள் சீனப் படையை எதிர்த்து நின்று போராடினாராம். இந்தப் பகுதி மக்கள் அனைவரும் அவரது நினைவை இன்றும் போற்றி மதிக்கிறார்கள். அதேபோல, சீனா ரூட்டில் உள்ள நாதுல்லா கணவாய் போகும் வழியில், பாபா மந்திர் என்று ஒன்று உள்ளது. இங்கே ஹர்பஜன் சிங் என்ற ஜவான், சீன ராணுவத்தைத் தன்னந்தனியாக எதிர்த்துப் போரிட்டாராம். பாபா மந்திரில் ஹர்பஜன் சிங் நினைவாக ராணுவம் டூரிஸ்ட்களுக்கு தினமும் அன்னதானம் செய்கிறது.

திரிபுரா மாநிலத்தின் அகர்த்தலாவில் உள்ள புவனேஸ்வரி அம்மன் கோயில் பிரபலமானது. அதன் அருகில் உள்ள குளத்தின் நடுவில், நீர் மஹால் என அழைக்கப்படும் ஒரு சிறு அரண்மனை உள்ளது. மணிப்பூர் மாநிலத் தலைநகரான இம்பாலில், அண்டை நாடான பர்மாவிலிருந்து பல வருடங்களுக்கு முன் அகதிகளாக இந்தியாவுக்கு வந்தவர்கள் பலர், வசிக்கிறார்கள். அங்குள்ள மார்க்கெட்டில் கடை வைத்திருக்கும் பலர் தமிழ் நாட்டைப் பூர்வீகமாகக் கொண்ட பர்மா அகதிகள்.

**கோடையில் பிரம்மபுத்ரா நதியில் இளைஞர்கள் கால்பந்தாட்டம் ஆடுவதைப் பார்க்கலாம்!**



அருள்வாக்கு

# பொய்யும் பயமும்

சாதாரணமாக ஒரு தப்புச் செய்கிறபோது உங்களுக்கு என்ன தோன்றுகிறது? அது ஓர் அழுக்கு மாதிரி உங்கள் மனசையே உறுத்துகிறது. உடனே இந்த அழுக்கை யாரும் தெரிந்து கொண்டு விடக்கூடாது என்று அதை மூடி மறைக்கத் தோன்றுகிறது. நியாயமாக, தவறுதல் உண்டானவுடன் பிரார்த்தனை பண்ணினால், அந்தப் பிரார்த்தனையே சோப்பைப் போல் அந்தத் தப்பை அகற்றிவிடும். அப்படிச் செய்யாமல், தப்பை மற்றவர்கள் தெரிந்துகொள்ளாமல் மூட வேண்டும் என்கிறபோது, பொய் சொல்ல வேண்டியதாகிறது. அழுக்கைத் தேய்த்துக் கழுவாமல், மூடி மூடி வைத்தால் சீழ் பிடித்துச் சிரங்காகிவிடுகிறது. உள்ளத்தை ரொம்பவும் கெடுக்கிற பயங்கரமான சிரங்கு பொய்தான்.

எதனால் தப்பை மறைக்கப் பார்க்கிறோம்? ஒன்று, நம்மை மற்றவர் நல்லவன் என்றே நினைக்க வேண்டும் என்ற பொய் எண்ணத்தினால்; அல்லது இன்னொருத்தரிடம் பயத்தினால் மறைக்கப் பார்க்கிறோம். பொய் என்பது சிரங்கு என்றால் பயம் என்பது சொறி மாதிரி.

பெரியவர்களிடமெல்லாம் உங்களுக்கு நிறைந்த மரியாதையும் மதிப்பும் இருக்கத்தான் வேண்டும். ஆனாலும் அர்த்தமில்லாத பயம் கூடாது. பயம் உள்ளத் தூய்மையைக் கெடுக்கிற அழுக்கு. தப்பு செய்தால்கூட, அதை உணர்ந்து, பணிவுடன் உள்ளபடி பெரியவர்களிடம் சொல்ல வேண்டுமே ஒழிய, பொய்யால் மூடி மறைக்கக்கூடாது. தப்பு செய்தது போதாது என்று, பொய்யும் சொன்னோம் என்பது வெளிப்பட்டு, நமக்கு மேலும் அவமானம், கஷ்டம் தான் ஏற்படும். உள்ளபடி சொன்னால் பெரியவர்கள் மன்னித்துவிடுவார்கள். மன்னிக்காமல், அவர்கள் தண்டித்தாலும் பரவாயில்லை. அவர்களுக்கு அந்த உரிமை உண்டு. 'நாம் தப்பு செய்தோம்; அதனால் அதற்குரிய தண்டனையைப் பெறுகிறோம்' என்று தைரியத்துடன் தண்டனையை ஏற்க வேண்டும். தைரியம், சத்தியம் இவை எல்லாம் மன அழுக்கைப் போக்குகிற சோப், சீயக்காய் மாதிரி.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்

மெல்லினத் தொடர்கதை




இன்டர்காமை வைத்து விட்டு நாற்காலியில் அப்படியே சாய்ந்தான். "சரிடா... ரிஸப்ஷன்லே சுசீலா வந்திருக்காளாம்..." என்று சொல்லிக் கொண்டே எழுந்தான் கிருஷ்ணபாரதி.

"இந்தக் கவிதாயினி உன்னை விட மாட்டாள் போலிருக்கே... விதி யாரை விட்டுது...? போ.. போய் கவிதாயினியை தரிசனம் பண்ணு..." என்று சொல்லிக் கொண்டே பார்த்தாவும் எழுந்தான்.

கேபின் கதவைச் சாத்தி விட்டுப் பார்த்தா போய் விட்டான். மேஜை மீது இருந்த புரூஃப்களைப் பார்த்தான். சுசீலா வந்தால் எப்போது கிளம்புவாள் என்று சொல்ல முடியாது. ஏதாவது எழுதிக் கொண்டு வந்திருப்பாள். அவளுடைய ஆபீஸில் அவளைக் கேட்பார் கிடையாது. அதுவும் நுங்கம்பாக்கத்தில் பக்கத்தில்தான் அவளுடைய ஆபீஸ். நினைத்தால் வண்டியை எடுத்துக் கொண்டு வந்து விடுவாள். அவனைப் பார்க்க வராவிட்டாலும், வேறு யாராவது நண்பர்களுடன் ஆபீஸ் நேரத்திலேயே லேண்ட் மார்க்குக்கோ, காப்பி குடிக்க ஏதாவது சிட் சாட்டுக்கோ சென்று விடுவாள். காலையில்தான் அவன் வீட்டுக்கு வந்து அரட்டை அடித்திருப்பாள். மத்தியானமே ஆபீஸுக்கு வந்து நிற்பாள். கொஞ்ச நேரமாவது அவளுடன் செலவிட வேண்டியதாகிவிடும்.

பிறரது சௌகரிய - அசௌகரியம் பற்றியெல்லாம் சுசீலா அவ்வளவாக யோசிக்க மாட்டாள். எப்போதும் அவளுக்கு அவள்தான் முக்கியம். அவள் உலகத்திலேயேதான் இருப்பாள். காலையில் வீட்டில் நடந்ததைச் சாக்காக வைத்து, சுசீலாவிடம் தன்னை அடிக்கடி பார்க்க வராதே என்று சொல்லி விடலாமா? அப்படிச் சொன்னால் அவளுடைய முகம் எப்படி இருக்கும் என்று கற்பனை செய்து பார்த்தான் கிருஷ்ணபாரதி. இப்போது மனோகரி ஆபீஸுக்கு வந்தால் எப்படியிருக்கும்? பார்த்தா ரொம்ப எளிதாகச் சொல்லி விட்டான். என்னைப் பார்க்க வராதே என்று அவ்வளவு எளிதில் சொல்லிவிட முடியுமா? அது எவ்வளவு அநாகரீகமானது. மனோகரி தன்னைச் சத்தியம் செய்யச் சொன்னபோது எவ்வளவு கூனிக் குறுகிப் போனான். அந்த மாதிரிக் கேவலமான காரியம்தானே இதுவும்? இது என்ன தேவையில்லாத கஷ்டம் என்று தோன்றியது.

இதுவரை, சுசீலா ரிஸப்ஷனில் இருக்கிறாள் என்று தகவல் வந்தால், உடனே சென்று பார்ப்பான். இன்று அப்படிப் போகத் தோன்றவில்லை. மனோகரி அங்கே இல்லை. ஆனால், அவளுடைய சொற்கள் அவனை வேவு பார்ப்பது போல் அவனைச் சுற்றிக் கொண்டிருந்தன. "சத்தியம்



வண்ணநிலவன்

பண்ணியிருக்கீங்க. அவளைப் போய்ப் பார்க்காதீங்க'' என்றது மனோகரியின் குரல்.

மனோகரியால், வேறு எப்படியும் அவளுக்கும் அவனுக்குமிடையே உள்ள நட்பைப் பார்க்க முடியவில்லையா? அவ்வளவு பலவீனமானவளா மனோகரி? அவளும் படித்திருக்கிறாள். கண்ணியமான குடும்பத்திலிருந்து வந்திருக்கிறாள். ஆனால், கார்த்திகா பிறந்ததற்குப் பிறகே, அவளிடம் எடுத்ததுக்கெல்லாம் ஒரு எரிச்சல் வர ஆரம்பித்திருந்தது. சமையலை அவளால் தன்னந்தனியே சமாளிக்க முடியவில்லை. அம்மாவுக்கு ஆர்த்திரிட்டிஸ். அதிகபட்சமாகக் காய்கறி நறுக்கித் தருவதற்கு மேல் அம்மாவால் அவளுக்கு உதவ முடியாது. சுற்று வேலைக்கெல்லாம் ஆட்கள் இருக்கின்றனர் என்றாலும், காலை நேரத்துப் பரபரப்புக்கு ஈடுகொடுக்க அவளுடைய மனமும்,

# உள்ளும் புறமும்



உடம்பும் தயாராக இல்லை. அவளுடைய இயலாமையும், சலிப்புற்ற வாழ்வும்தான் இப்படியொரு அபாண்டமான கற்பனையை அவளுக்குள் விதைத்து விட்டதா? இன்டர்காம் மீண்டும் அழைத்தது.

''சார்... அவங்க காத்துக்கிட்டிருக்காங்க...'' என்றாள் உஷா.

''இதோ வர்றேன்...'' என்றான். மெதுவாக எழுந்து, சுரத்தே இல்லாதவன் போல நடந்து சென்றான். ரிஸப்ஷனில் சுசீலாவுடன் இன்னொரு பெண்ணும் உட்கார்ந்திருந்தாள். அவனைப் பார்த்ததும் அந்தப் பெண் முதலில் எழுந்து நின்றாள். அவளைப் பார்த்துக் கும்பிட்டுக் கொண்டே அருகே சென்றான்.



''என்ன ரொம்ப பிஸியா...?'' என்று சிரித்துக் கொண்டே கேட்டாள் சுசீலா. அவள் தோளில் ஹேண்ட்பேக் தொங்கிக் கொண்டிருந்தது. அவளுடன் வந்திருந்த பெண் கையில் ஒரு கவரை வைத்திருந்தாள்.

''பாரதி... இது பிரேமா. கொஞ்சம் எழுத ஆரம்பிச்சிருக்கா...'' என்றாள். பிரேமா மீண்டும் அவனை வணங்கினாள். சினிமா செக்ஷன் மூர்த்தி அவனைப் பார்த்துச் சிரித்துக் கொண்டே சென்றான். இன்று சுசீலாவுடன் அதிக நேரம் செலவிட வேண்டியிருக்காது என்று தோன்றியது. சீக்கிரமே சுசீலா புறப்பட்டு விடுவாள் என்று நினைத்தான்.

''அப்படியா? ரொம்பச் சந்தோஷம். நல்லா எழுதுங்க.''

''ஆசீர்வாதம் பண்ணினாப் போறுமா?'' என்று கேட்டாள் சுசீலா.

''என்ன பண்ணணும் சொல்லு... சுசீலா...''

''அப்படிச் சொல்லுங்க...'' என்று சொல்லிக் கொண்டே, பிரேமாவின் கையிலிருந்த கவரை வாங்கிப் பிரித்து உள்ளேயிருந்து ஒரு பேப்பர் கற்றையை எடுத்தாள்.

''உக்காருங்க...'' என்று அவர்களை உட்காரச் சொன்னான். எதிரேயிருந்த சோபாவில் அவன் உட்கார்ந்தான்.

''ஏதாவது சாப்பிடறீங்களா?'' என்று இரண்டு பேரையும் பார்த்துக் கேட்டான்.

''அதெல்லாம் ஒண்ணும் வேண்டாம். இப்போதான் பிட்சாட்லே காப்பி சாப்பிட்டோம். பிரேமா தமிழகப் பெண்கள் முன்னேற்றப் பேரவையிலே ஒரு உறுப்பினர். விமன்ஸ் லிப்லே நெஜமாவே இன்ட்ரஸ்ட் உள்ளவா. 'பெண்களுக்கு உரிமை ஏன்'னு ஒரு பவர்ஃபுல் ஆர்ட்டிகிள் எழுதியிருக்கா. நான் படிக்கப் பார்த்தேன்; ரொம்ப நல்லா இருக்கு. விமன்ஸ் இஷ்யூஸைப் பத்தி அப்பப்போ எழுதணும்னு நெனைக்கிறா. உங்க ஞாயிறு மலர்லே அவளுக்கு ஒரு காலம் ஒதுக்கி எழுதச் சொல்லலாம்...'' என்றாள் சுசீலா. அந்தக் கட்டுரையை கிருஷ்ணபாரதியிடம் நீட்டினாள். அதை வாங்கிக் கொண்டே, ''எங்கே வேலை பார்க்கறீங்க...?'' என்று பிரேமாவிடம் கேட்டான்.

''மேக்னா இண்டியாவிலே வொர்க் பண்றேன்'' என்றாள் பிரேமா.

''வீடு...''

''தில்லைகங்காநகர்லே...''

## சீதையைத் தேடி...

அட! இது ஸ்டிரைக் இல்லீங்க... டிராவல்தான். கோடை சுற்றுலாதான். பீஹாரிலிருந்து நேபாள நாட்டிலுள்ள ஜனக்பூருக்கு போகுது இந்த டீஸல் ரயில். வேகம் மணிக்கு 10 கிலோ மீட்டர்தான். மூன்று மணி நேரத்தில் 29 கிலோ மீட்டர்தான் போக முடியும். ஜனக்பூர்ல என்ன விசேஷம்? அது சீதை பிறந்த ஊராம். ஆனால், இவங்க சீதையை மட்டும் பார்க்கப் போறவங்க இல்ல - வியாபாரம், வேலை விஷயமாகவும்தான்.

- அனிதா ராமச்சந்திரன், பெங்களூரு.

''தில்லைகங்கா நகர்லேயா? நான் நங்க நல்லூர்லேதான் இருக்கேன். கவிலா வீட்டுப் பக்கம்தான்.''

''நங்கநல்லூர் ஒரே எழுத்தாளர்கள் ஏரியாவா மாறிண்டு வர்றது...'' என்றாள் கவிலா. கிருஷ்ணபாரதி மேலெழுந்தவாரியாகக் கட்டுரையைப் புரட்டினான்.

''படிக்கப் பார்க்கறேன். படிச்சிட்டுச் சொல்றேன்...'' என்றான்.

''சொல்றது முக்கியமில்லே... பப்ளிஷ் பண்ணனும்'' என்றாள் கவிலா.

கிருஷ்ணபாரதி சிரித்தான்.

''நீங்க எங்க பத்திரிகையைப் படிக்கிறீங்களா?'' என்று பிரேமாவிடம் கேட்டான்.

''திசைகள் நான்குன்னு ஒரு காலம் வர்றதே... அது ரொம்ப நல்லா இருக்கு...'' என்றாள் பிரேமா. எல்லா துறைகளையும் பற்றிய செய்தி விமர்சனக் கட்டுரைப் பகுதி அது. கொஞ்சம் அறிவுஜீவிகள்தான் அந்தப் பகுதியைப் படிக்க முடியும். அவளுடைய ரசனை ஓரளவு பிடிபட்ட மாதிரி இருந்தது.

''உனக்கு பிரேமாவை ரொம்ப நாளாப் பழக்கமா?'' என்று கேட்டான்.

''ஏன்...?'' என்று கேட்டாள் கவிலா.

''இல்லே, பிரேமா அடக்க ஒடுக்கமா சேலை கட்டியிருக்காங்க... நீ எப்பவும் சுடிதார்தான் போடறே... அதான் கேட்டேன்...''

''வர்ற ஐப்பசியில கல்யாணத்தை வெச்சிக்கலாமே சம்பந்தி!''

''கண்டிப்பா, ஆனா அப்ப கொடுக்கப் போற காசியாத்திரை 'குடை'யை, இப்பவே கொடுத்தீங்கன்னா, வெயிலுக்கும் வசதியா இருக்கும்.''

- வெ.சீதாராமன்



"சேலை கட்டினா பண்புள்ளவள்... கடிதார் போட்டா கொஞ்சம் பண்பாடு கம்மியானவள்னு அர்த்தமா?"

"ஐயையோ... அப்படிச் சொல்ல வர்லே..."




என்று அவசரத்தோடு கூறினான்.

"சரியான மேல்சாவனிஸ்ட் நீங்க..."

"இது மேல்சாவனிஸமா?"

"பின்னே! அவளுக்குப் பிடிச்சதை அவ போட்டுக்கறா. எனக்குப் பிடிச்சதை நான் போட்டுக்கறேன். ரெண்டு பேரும் ஒரே மாதிரி கடிதார் போட்டுண்டாத்தான் ஃப்ரெண்ட்ஸா இருக்க முடியுமா? நல்லா இருக்கே உங்களோட லாஜிக்..."

"உனக்கு ஆம்பளைக்குத் தண்ணி காட்டறதுன்னா அல்வா சாப்பிடுற மாதிரி" என்று சொல்லிச் சமாளித்தான். ஏதாவது பேச வேண்டுமென்பதற்காகத்தான் ஏதோ கேட்டான். சுசிலா பிடித்துக் கொண்டாள். அவளிடம் பேசி மீள முடியுமா...?"

"எப்போ படிச்சுட்டுச் சொல்றீங்க...?" என்று கேட்டாள் பிரேமா.

"என்னோட மொபைல் நம்பர் தர்றேன். செவ்வாய்க்கிழமைக்கு மேலே போன் பண்ணுங்க..." என்று சொல்லிவிட்டு, அவள் எழுதப் போகிறாளா என்று பார்த்தான். அதற்குள் சுசிலா, "உங்க நம்பர்தான் என்கிட்டே இருக்கே... நான் அவளுக்குக் கொடுத்துர்றேன்..." என்றாள்.

"என்ன வீட்டுப் பக்கமே உன்னைக் காணோம்...?" என்று ஒப்புக்காகக் கேட்டான் கிருஷ்ணபாரதி.

"இப்போ ஒரு வாரமா வீட்டிலே சமையல்கார மாமி இல்லே. கும்பகோணம் போயிருக்கா. அதனாலே கார்த்தாலே டயம் சரியாப் போயிடறது."

"அப்பா கூடக் காணோமே?"

"ஒங்கப்பாவும் எங்கப்பாவும்தான் தினசரி கோவில்லே பார்த்துக்கறாங்களே..."

"அப்படியா..?"

"என்ன அப்படியா? தெரியாதா உங்களுக்கு?"

"அப்பா வீட்டுக்கு வந்து பேசிக்கிட்டு இருப்பார். அதான் வரலையேன்னு கேட்டேன்."

"நெனைச்சா வருவார். சித்தம்போக்கு சிவன் போக்கு" என்றாள் சுசிலா.

"பரவாயில்லியே... நீ கூட சித்தம் சிவன்னு எல்லாம் பேசறியே..."

"உங்களோட சேர்றோனோ இல்லியோ? எல்லாம் சகவாசதோஷம்... வேறென்ன?" என்று சொல்லிவிட்டு விழுந்து விழுந்து சிரித்தாள் சுசிலா. சிறிது நேரம் மௌனம் நிலவியது. பிரேமா சுசிலாவை ஏறிட்டுப் பார்த்தாள். மெதுவாக சுசிலாவிடம், "போகலாமா?" என்று கேட்டாள்.

"புறப்பட வேண்டியதுதான்... சரி வரட்டுமா? சீக்கிரமா படிச்சுட்டுச் சொல்லுங்கோ..." என்றாள் சுசிலா.

"நிச்சயமா..." என்றான் கிருஷ்ணபாரதி. பிரேமா எழுந்து நின்றாள். சுசிலாவும் எழுந்தாள். இருவரும் சொல்லிக் கொண்டு புறப்பட்டனர்.

(தொடரும்)

கல்வெட்டுகள்

அமரர் கல்கி

# சக்தியுள்ள சாதனம் நசியலாமா?



நாடகக் கலை க்ஷீணிக்கும்படியோ, நசித்துப் போகும்படியோ விடவே கூடாது.

அப்படி விடுவது விவேகம் சிறிதும் அற்ற செயலாகும்.

ஏனெனில், ஒரு நாட்டின் புனருத்தாரண முயற்சிகளுக்கு மிகவும் உதவி செய்யக்கூடிய சாதனங்களுக்குள்ளே நாடகக் கலை மிகச் சிறந்த சாதனம்.

நாடகக் கலை மற்றும் பல கலைகளைத் தனக்குள் அடக்கி வைத்துக் கொண்டிருக்கும் கலைப் பொக்கிஷம். நாடகத்தில் இலக்கியம் இருக்கிறது; சங்கீதம் இருக்கிறது; நடனம் இருக்கிறது; சித்திரம் இருக்கிறது; சிற்பமுங்கூட இருக்கிறது. மற்ற எல்லா அருங் கலைகளுக்கும் நாடகத்தில் இடம் இருக்கிறது. ஆகவே, நாடகக் கலை வளருவதின்மூலம் மற்ற எல்லாக் கலைகளும் வளருகின்றன.

நாடகக் கலையை ஏன் சர்க்காரும் பொது மக்களும் புறக்கணிக்க வேண்டும்? அந்தக் கலைக்கு உதவி செய்ய வேண்டியதன் அவசியத்தை ஏன் உணராமலிருக்க வேண்டும்?

ஸோவியத் அரசாங்கம் ஸ்தாபிதமான முதல் மூன்று வருஷத்துக்குள்ளே, ருஷியாவில் ஒவ்வொரு நகரத்திலும், ஒவ்வொரு பட்டணத்திலும், ஒவ்வொரு கிராமத்திலும் ஒரு நாடக மேடை ஏற்பட வேண்டும் என்று உத்தரவு போட்டார்கள். அந்த உத்தரவு காரியத்தில் நடப்பதற்கும் வேண்டிய ஏற்பாடுகள் செய்தார்கள்.

ருஷியா இன்றைக்கு உலகத்திலே மிகப் பெரிய வல்லரசாக - அமெரிக்காவையும் எதிர்த்து நிற்கக்கூடிய பேரரசாக விளங்குவதற்கு, அந்த ஆயிரக்கணக்கான நாடக மேடைகளே காரணமாகும்.

அவ்வளவு சக்தியுள்ள ஒரு சாதனத்தை நசிக்கும்படி விடுவதைப்போல அறிவீனம் வேறு என்ன இருக்க முடியும்?

- (கல்கி, பிப்ரவரி-5, 1950-ல் வெளியானது)

**புகைப்படக் கலைஞர் ஸ்ரீஹரி ஸ்விட்சர்லாந்தின் ஜூரிச் நகரில் வசிக்கும் இந்தியரின் திருமணத்துக்கு ஃபோட்டோ எடுக்க அழைக்கப்பட்டார்! அவர் பார்வையில் அந்த நாடு இதோ...**

நம் நாட்டில் திருமணம் என்றால், மண்டபம், சாப்பாடு, இசை நிகழ்ச்சி ஆகிய வற்றுக்குத் தரும் முக்கியத்துவத்தை புகைப் படங்களுக்குத் தருவதில்லை என்று உள்ளூர எனக்கு ஓர் ஆதங்கம் உண்டு. கல்யாணச் செலவு பல லட்சம் ஆனாலும், எல்லாமே அன்று ஒரே நாளில் கரைந்து போய்விடும். என்றாலும், திருமணத்தின் பல்வேறு நிகழ்வு களின்போதும் எடுக்கப்படும் புகைப்படங் களும், வீடியோவும்தான், அந்தத் திரு மணத்தை வாழ்நாள் முழுக்க நமக்கு நினை வூட்டும்; அடுத்த தலைமுறையினருக்கும் ஆவணமாக இருக்கும். இதை நிறையப் பேர் உணர்வதில்லை.

திருமண ஃபோட்டோக்கள் பதிவு செய் வது ஒரு கலை. அக்கலையை அயல்நாட்டில் நிரூபிக்க மீண்டும் ஒரு சந்தர்ப்பம்.

சென்னையிலிருந்து பத்து மணி நேர விமானப் பயணம் செய்து ஜெர்மனி சென் றேன். அங்கிருந்து யூரோ ரயில் மூலமாக

# பனியில் செய்த





ஸ்விட்சர்லாந்து நாட்டின் ஜூரிச் நகரத்தை அடைந்தேன்.

1515-ம் ஆண்டு முதல் ஸ்விட்சர்லாந்து ந்த ஒரு அன்னிய நாட்டுடனும் போரில் டுபடவில்லை என்று அறிந்தபோது ஆச்சர்யமாக இருந்தது. 1848-ல் அமலுக்கு வந்த அரசியல் சட்டம்தான் இன்றளவும் பின்பற்றப்படுகிறது. போரின் கொடுமை களால் ஸ்விட்சர்லாந்து மக்கள் பாதிக்கப் டவில்லை என்பதே, அந் நாட்டின் அந்த மான வளர்ச்சிக்கு முக்கியமான காரணம் என்று சொன்னார்கள்.

நாட்டின் ஜனத்தொகையில் தொண்ணூற்றொன்பது சதவிகிதம் பேர் எழுதப் படிக்கத் தெரிந்தவர்கள். பொதுவாகவே, ஸ்விஸ் நாட்டினர் ஆரோக்கியமானவர்கள். ஆண்களின் சராசரி ஆயுட்காலம் 79 ஆண்டுகள். பெண்களின் ஆயுட்காலம் 84 ஆண்டுகள். இதைச் சொன்ன நண்பர், 'மனைவிமார்கள் நச்சரிப்பு தாங்காமல், கணவர்கள் சீக்கிரமே போய்ச் சேர்ந்துவிடுகிறார்கள்' என்று கமெண்ட் அடிக்க, அவர் மனைவிக்கு இலேசான

# பரவசம்!









கோபம்.

இங்கு கணிசமான எண்ணிக்கையில் இந்தியர்களும் உண்டு. இந்தியத் தமிழ் மக்களை விட, ஈழத்தமிழர்கள் எண்ணிக்கைதான் அதிகம். மிதமான வெப்பம் உடைய கோடையும், கடுங்குளிர்க் காலமும் கொண்ட இந் நாடு, பூலோக சொர்க்கம் என்றே அழைக்கப்படுகிறது.

அடர்த்தியான பனி படர்ந்த மலைப் பகுதியில் நடப்பது அலாதியான அனுபவம். மலை மீது நின்றுகொண்டு எந்தப் பக்கம் திரும்பினாலும், நுரையுடன் பாலைக் கொட்டி வைத்தாற்போல வெள்ளை வெளேரென்று இருக்கிறது! பழக்கமில்லாததால், பனியில் நடக்கும்போது, பலர் சறுக்கி சறுக்கி விழுந்து சந்தோஷப்படுகிறார்கள். பனிமலைப் பகுதியில் ரயில் பயணம் செய்வது ரம்யமாக இருந்தது.

பனிமலையில் ஒரு இந்தியன் ரெஸ்டாரன்ட் இருக்கிறது. அதன் பெயர்ப் பலகையைப் பார்த்தவுடன், 'மனத்தில் தாய்மண் மீதான பாசம் பொங்குவதாக' நான் சொல்ல, உடன் வந்த நண்பர், 'ம்.. அதற்குப் பெயர் மண் பாசமில்லை; வயிற்றுப் பசி! உள்ளே போய்ச் சாப்பிட்டவுடன் எல்லாம் அடங்கி விடும்' என்று ஜோக் அடித்தார். உள்ளே சென்று ஒரு பிடி பிடித்துவிட்டு எழுந்தபோது, மூவாயிரம் ரூபாய்க்கு பில் வந்து மிரட்டியது.

மக்கள் கருத்தே மகேசன் தீர்ப்பு என்பது இந்த நாட்டின் தாரகமந்திரம். எந்த ஒரு விஷயம் என்றாலும், உடனே மக்கள் அந்த விஷயம் குறித்து என்ன நினைக்கிறார்கள் என்பதைக் கண்டறிய வாக்கெடுப்பு (referendum) நடத்துவது அந்நாட்டு மரபாம்.

"வாக்களிப்பு என்றால், நம்ம ஊர் தேர்தல் மாதிரி போஸ்டர், ஊர்வலம், மீட்டிங், வாக்குச்சாவடி எதுவும் கிடையாது. எல்லாரும் தபால் மூலம்தான் வாக்களிப்பார்கள்" என்று நண்பர் சொன்னபோது, 'சுவாரசியமே இல்லாமல் என்ன தேர்தல் வேண்டிக் கிடக்கு?' என்று சொல்லத் தோன்றியது.

சாலை விதிகளை இங்கே எல்லோரும் படுசீரியஸாக கடைபிடிக்கிறார்கள். காரில் பயணம் செய்து கொண்டிருந்தபோது, ஸ்விட்சர்லாந்துக்கு என்னை அழைத்த நண்பரிடம் "போலீஸ்காரர்கள் லஞ்சம் வாங்குவார்களா?" என்று கேட்டேன். "நோ சான்ஸ்!" என்றவர் தொடர்ந்தார் : "டிராஃபிக் சிக்னலை மீறினால் நம்மை அழைத்துக் கொண்டுபோய் ஒரு சிக்னலில் நிறுத்துவார்கள். கூடவே ஒரு போலீஸ் நாயை அழைத்துவந்து அதே சிக்னலில் நிறுத்துவார்கள். சிவப்பு விளக்கு ஒளிரும் வரை நாய் நின்று கொண்டே





இருந்துவிட்டு, பச்சை விளக்கு விழுந்ததும் சாலையைக் கிராஸ் செய்யும். 'ஒரு நாய்க்கு இருக்கும் அறிவு கூட மனிதனான உனக்கு இல்லையே?' என்று ஊரறிய பகிரங்கமாகக் கட்டிக்காட்டி அபராதம் விதிப்பார்கள்! நம்மை அந்த நாய் கேவலமா பார்க்கும்...'' என்றார்கள்.

குடித்துவிட்டு, கார் ஸ்டியரிங்கைப் பிடித்தாலே கடுமையான குற்றம். ஆன் தி ஸ்பாட் மெஷின் மூலம் பரிசோதனை செய்து, குடித்திருக்கும் மதுவின் அளவுக்கு ஏற்ப அபராதம் போடுவார்களாம்! நண்பர் ஒருவர் அந்தத் தப்பைச் செய்துவிட்டு, மூன்று லட்சம் ரூபாய் அளவுக்கு அபராதம் கட்டிய அனுபவத்தையும் சொன்னார் அவரது மனைவி! அப்புறம் யாரேனும் அந்தத் தப்பைச் செய்வார்களா?

நான் சென்றிருந்த சமயம், ஸ்விட்சர்லாந்தில் கோடையை வரவேற்கும் விழா நடந்துகொண்டிருந்தது. ஒரு பொதுஇடத்தில் பஞ்சினால் செய்த பிரமாண்டமான ஒரு பொம்மையை நிறுத்தி, அதற்கு நெருப்பூட்டி, அதைச் சுற்றி நின்று கொண்டு ஆண்களும், பெண்களும் ஆடிப் பாடிக் கும்மாளமிட்டுக் கொண்டிருந்தார்கள்.

**“‘ஒரு நாய்க்கு இருக்கும் அறிவுகூட மனிதனான உனக்கு இல்லையே?’ என்று ஊரறிய பகிரங்கமாகச் சுட்டிக்காட்டி அபராதம் விதிப்பார்கள்! நம்மை அந்த நாய் கேவலமா பார்க்கும்...!”**

மக்களின் வாழ்க்கைத்தரம் உயர்ந்துள்ளது ஒருபக்கம் என்றால், அவர்கள் வம்பு தும்புக்குப் போகாமல், சட்டத்தை மதித்து வாழ்கிறார்கள் என்பது ஆச்சரியமான இன்னொரு பக்க உண்மை. பேப்பரைப் புரட்டினால் திருட்டு, கொலை, பாலியல் பலாத்காரம் போன்ற செய்திகள் வெகு அபூர்வமாகத்தான் தென்படுகின்றன.

இந்தியாவிலிருந்து சென்ற என்னை, பலரும் தங்கள் வீட்டுக்கு விருந்தினராக அழைத்து வாட்ச், ஷர்ட், சாக்லேட் என்று ஏராளமான பரிசுகளைக் கொடுத்து அசத்தியது மறக்கவியலாத அனுபவம். திருமண வீட்டில், 'இந்தத் திருமணத்தைப் புகைப்படமெடுக்க, இந்தியாவிலிருந்து ஸ்பெஷலாக ஸ்ரீஹரி வந்திருக்கிறார்' என்று அறிவித்தவுடன், அனைவரும் பாராட்டிக் கைதட்டினார்கள். அது என் கேமராவுக்கும், நான் சார்ந்த புகைப்படத்துறைக்கும் கிடைத்த மரியாதை என்று நினைக்கிறேன்.

தொகுப்பு : **எஸ். சந்திரமௌலி**

படங்கள்: **ஸ்ரீஹரி**

**மேஷம்:**

வருவாய்க்குக் குறைவில்லாத வாரம்! நீண்டநாள் எதிர்பார்த்த திருமணம் கைகூடும். புதிய வீடு வாங்கும் யோகம் சிலருக்கு அமையும். நினைப்பது நிறைவேறும். எதிர்பாராத தகவலொன்று காத்திருக்கிறது.

**ரிஷபம்:**

நன்மைகளே கிட்டும் வாரம்! கவலையை விடுங்க! உங்க காட்டுல மழைதான். மனநிறைவான நற்பலன்கள் கிட்டும். நீண்டநாள் பிரச்னைகள் தீர்வுக்கு வரும் நேரமிது. குடும்பத்தில் அமைதி நிலவும்.

**மிதுனம்:**

இந்த வாரம், கொடுக்கிற தெய்வம் கூரையைப் பிச்சுக்கிட்டு கொடுக்கப் போவுது! ஆமாங்க, பணம் பல வழிகள்ல உங்களுக்கு வந்து பாக்கெட்டுகளை நிரப்பப் போவுதாம்! அதை, நல்ல வழியில பயன்படுத்திக்கறது உங்க சாமர்த்தியம். வியாபாரம் செழிப்பாக நடக்கும்.

**கடகம் :**

இந்த வாரம் பூரா புகழ் மழையில நனையப் போறீங்க! எல்லாம், உங்க திறமையாலதான். உடல் நிலையில் இருந்த தொல்லைகள் விலகிப் போகும். விமானப் பயணம் செய்யும் வாய்ப்பு காத்திருக்கிறது. சிலருக்கு வீடு வாங்கும் யோகம் அமையும்.

**சிம்மம்:**

இந்த வாரம், உங்களுக்குப் பலவகை களில் பணம் கொட்டும் வாரம்! பெரிய 'டீல்' ஒன்றில் அள்ளப்போறீங்க பணத்தை. உடல் நலத்தில் கொஞ்சம் கவனம் தேவை. உறவினர், சுற்றத்தாரிடமும் முன் எச்சரிக்கை தேவை.

**கன்னி:**

இப்போது, உங்களுக்குச் சற்றுச் சிரமமான காலம். எனினும், கவலைப்படாமல் காரிய மாற்றுங்கள்! தெய்வ வழிபாட்டைத் தீர்க்கமாகக் கடைபிடித்தால் சூரியனைக் கண்ட பனியென விலகிப் போகும் உங்கள் கஷ்டங்கள்!

**துலாம்:**

நினைத்த காரியங்கள் வெற்றிபெறும். சும்மா தூள் கௌப்புங்க! தீராத சொத்து விவகாரம் ஒன்று இந்த வாரம் தீர்வுக்கு வரும். வராத கடனும் வீடு தேடி வரும். வாகனம் வாங்கச் சிறந்த தருணமிது!

**விருச்சிகம்:**

உங்களுக்கு இந்த வாரம் படுசூப்பர்! ஆடை, ஆபரணங்கள் சேரும். உடல் நலம் நன்றாக இருக்கும். என்றாலும், வாயைக் கொடுத்து மாட்டி, வம்புகளை விலைக்கு வாங்காம, உஷாராக இருங்க! வேலைப் பளு கொஞ்சம் அதிகம்தான்.. அதற்காக டென்ஷன் ஆகாம, கடவுள்மேல பாரத்தைப் போட்டுக் கடமையைச் செய்யுங்க!

**தனுசு :**

முன்னேற்றமான வாரம். சிலருக்கு சொந்த வீட்டிலிருந்து வாடகை வீட்டுக்குக் குடிபோறவேண்டிய சூழ்நிலை ஏற்படலாம். சில பேர் நீண்ட தூரம் பயணம் மேற்கொள்ள லாம். அதே சமயம், உங்களது சில எண்ணங்கள் நிறைவேறும் வாய்ப்புகளும் உண்டு.

**மகரம் :**

அற்புதங்கள் நடக்கும் வாரம். திடீர்ப் பிரயாணம், நல்ல மனிதர்களின் பாராட்டு, உத்யோக உயர்வு... என்று நல்லவை நிறை வேறும். சிலருக்கு வீடு / மனை வாங்கும் தருணமும் கிட்டும். வழக்கு, வியாபாரம்

**தஞ்சை பரத்வாஜ்**

வெற்றி தரும்.

**கும்பம் :**

மகிழ்ச்சிகரமான வாரம்! கடன் பிரச்னை தீரும். சேமிப்பு பெருகும் பழைய பொருள் விற்றுப் புதிய பொருள் வாங்குவீர்கள். உடல்நலம் சீராகும். மனைவி மூலம் நற்பலன் பெருகும். குழந்தைகள் வகையில் ஆனந்தம் பொங்கும்.

**மீனம் :**

உங்கள் வாக்கு வன்மை கூடும் வாரமிது. குடும்ப வாழ்வு செழிப்படையும். சிலருக்குப் புதிய சொத்து வாங்கும் யோகம் கிட்டும். கடன் தொல்லை தீரும். இல்லத்தில் சுபநிகழ்ச்சிகள் நடத்தும் காலமிது. நீண்ட நாள் வழக்கு முடிவுக்கு வரும்.

02.05.2010 முதல்
08.05.2010 வரை

# நடக்குமென்பார் நடக்கும்

**வாழ்க்கையில் ஒரு முறையாவது பார்த்தேயாக வேண்டும் என்று நீங்கள் பிடிவாதக் கனவு காணும் இடம் எது?- என்ற கேள்வியுடன் சில கல்லூரி மாணவிகளைச் சந்தித்த போது அவர்கள் அடுக்கிய அதிசய பிரதேசங்கள்:**

**ரச்சனா:** 'என் கனவு டூர் மொரீஷியஸ்! அது ஒரு அழகான தீவு; இந்தியாவுடன் நெருங்கிய தொடர்பு கொண்ட நாடு; உலகம் முழுவதிலிருந்தும் டூரிஸ்ட்களை ஈர்க்கும் சொர்க்கம்; அங்கே 1800-களில் கட்டின மகேஷ்வர்நாத் என்கிற சிவன் கோவில் ஒண்ணு இருக்குன்னு தெரிஞ்சப்போ ஆச்சரியமா இருந்தது. அங்கே வாட்டர் ஸ்போர்ட்ஸ் நிறைய உண்டு. அமெரிக்கா, ஐரோப்பா மாதிரி மொரீஷியஸ் போக அதிகமா செலவாகாது! என் லைஃப்ல ஒரு தடவை கண்டிப்பா மொரீஷியஸ் போய்ட்டு வந்திடுவேன்' என்கிறார் இந்த எம்.ஓ.பி. வைஷ்ணவா கல்லூரியின் விஸ்காம் மாணவி.

**நளினி பார்த்திபன்:** 'என் சாய்ஸ் லண்டன்! பல நூற்றாண்டுகளாக ஒரு வரலாறும், கலாசாரமும், பாரம்பரியமும் கொண்ட நகரம். சின்ன வயசுல 'லண்டன் பிரிட்ஜ் இஸ் ஃபாலிங் டவுன்'ன்னு ரைம் சொன்ன போதே, லண்டன் எனக்கு அறிமுகமாயிடிச்சு! அலங்காரப் பதவின்னாலும், பழைய காலம் மாதிரி இன்னமும் ஒரு மகாராணி, அவங்களோட பிரம்மாண்டமான அரண்மனைகள், அங்கே நிற்கும் கலர்ஃபுல் காவலர்கள், அவர்களின் அணிவகுப்பு போன்ற விஷயங்கள் ரசிக்கத்தக்கவை. டயானா என் ஃபேவரிட்! அவங்க கல்லறை அப்புறம், லண்டன் பிரிட்ஜ், பிக்பென் கடி

துருவக் கர

வந்திதாமோகன்

நளினி பார்த்திபன்

ாரம், தத்ரூபமான மெழுகுச் லைகள் கொண்ட மேடம் சாத் மியூசியம் இவற்றையெல் ாம் நான் மிஸ் பண்ண மாட் டன்' என்கிறார் அண்ணா பல் லைக் கழக எம்.பி.ஏ. மாணவி, வினி பார்த்திபன்.

சிந்துஜா: 'இயற்கையை )ன்னமும் ஒரேயடியாக ழித்து விடாமல் விட்டு வைத் ருக்கிற ஒரே இடம் ஆப்ரிக்கா. ிரம்மாண்டமான நைல் நதி தல் கம்பீரமான பிரமிடுகள் ரை ஏராளமானவை இயற்கை ாகவும், மனிதன் உருவாக்கிய தனைகளின் சாட்சிகளாகவும் ஆப்ரிக்கா முழுவதிலுமாக நிறைய இருக்கின் றன. அடர்ந்த காட்டுப் பகுதிகள், அவற்றில் வாழும் பல்வேறு வன விலங்குகள், பறவைகள் இவற்றைப் பற்றி எல்லாம் டிஸ்கவரி சேனல், அனிமல் பிளானெட் போன்றவற்றில் நிறையப் பார்த்து ரசித் திருக்கிறேன். பகுதி பகுதியாக ஆப்ரிக்காவை அலச வேண்டும் என்பதே என் கனவு!' எனக் கூறுகிறார், ஜஸ்டிஸ் பஷீர் அகமது கல்லூரி மாணவியான இவர்.

வந்திதா மோகன்: 'கொளுத்தும் கோடையில் வாடிக்கொண்டிருக்கும் நான், போக விரும்புகிற இடம் குளு குளு ஜிலு ஜிலு அன்டார்டிகா. இன்டர் நெட்டின் மூலமாக நிஜமாகவே அன்டார்டிகாவுக்கு டூரிஸ்ட் குழுக்கள் அவ்வப்போது சென்று வரு கிறார்கள் என்று தெரிந்தது. நம் ஊர் குலு மணாலியின் வெள்ளைப் பனியைப் பார்த்தே பிரமித்துப் போன எனக்கு, அன்டார்டிகா எப்படி இருக்கும் என்று கற் பனை செய்து பார்க்க முடிகிறது. மிகவும் அதிசய துரு வக் கரடி, பெங்குவின் மற்றும் இதர பனிப்பிரதேச உயிரினங்களைப் பார்க்க மிகுந்த துடிப்பாக இருக் கிறது' என்கிறார் பல் மருத்துவக் கல்லூரி மாணவி வந்திதா மோகன்.

படங்கள்: **சந்திரமெளலி**



கலக்க வருதுப்பா

# கல்கி

ரீடர்ஸ் கெட் ரெடி

தர்மபுரி-கிருஷ்ணகிரி மாவட்டங்களின் கற்கண்டு வாசகர்களே!

## இப்ப உங்க ஊருக்கே வருது கல்கி டீம்..

- உடனடித் தேவை?
- உங்க ஊர்ப் பெருமை?
- வாட்டம் தரும் வேதனை?
- அமைதி தரும் ஆலயங்கள்?
- பெருமைப்பட வைக்கும் தலைவர்கள்?
- மனசைச் சுத்திகரிக்கும் டூரிஸ்ட் ஸ்பாட்?
- கலை இலக்கியத்தில் உங்க மாவட்டங்களின் பங்களிப்பு?
- அடிப்படைத் தேவைகள் நிறைவேறிடுச்சா... இல்லையா?

**வாசகர்களே...**

உங்க மாவட்டங்களைப் பத்தி நீங்க அனுப்புற தகவல்கள்தான்
கல்கி தர்மபுரி-கிருஷ்ணகிரி மாவட்ட ஸ்பெஷல் இதழ்களுக்கு அஸ்திவாரம்

விவரங்கள் எதிர்ப்பக்கத்துல இருக்கு!

## தர்மபுரி, கிருஷ்ணகிரி... கெட் ரெடி! கெட் ரெடி!

ஒகேனக்கல்

ஆமாம்! உங்கள் தர்மபுரி - கிருஷ்ணகிரி மாவட்டங்களுக்கு 'கல்கி' டீம், நேரில் வந்து உங்கள் பிரச்னை / யோசனையை ஆராய்ந்து, உங்கள் வாய்ஸுக்கு 'கல்கி' இதழ் மூலம் மைக் கொடுக்கும்!

சில சிம்பிள் கண்டிஷன்ஸ்...

- கீழே உள்ள கூப்பனைக் கத்தரித்து ஒட்டி அனுப்பப்படும் கடிதம், படைப்புகள் மட்டுமே, பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளப்படும்...
- ஒரு கடிதத்தில் 5 செய்திகள் / படைப்புகள் மட்டுமே இருக்கலாம்.
- ஒருவரே எத்தனை கடிதம், படைப்புகள் வேண்டுமானாலும் அனுப்பலாம் (தனித்தனி கூப்பனுடன்).
- பிரசுரமாகும் கடிதங்கள், யோசனைகள், படைப்புகளுக்குச் சன்மானங்கள் உண்டு.
- வாசகர்கள் தேர்வு செய்யும் மிகச் சிறந்த கடிதம் அல்லது யோசனை அல்லது படைப்புகளுக்குச் சிறப்புப் பரிசும் உண்டு...
- தர்மபுரி - கிருஷ்ணகிரி மாவட்டங்களின்.. பிரச்னைகளுக்கு - ☑ பெட்டிஷன் பாக்ஸ். ஆன்மிக, வியாபார, சுற்றுலாத் தலங்களின் சிறப்புக்கு - ☑ நியூஸ் ஏந்தி பவன். சிறுகதைகள், கவிதைகளுக்கு - ☑ வேடந்தாங்கல். நகைச்சுவைக்கு - ☑ ஜோக் ஃபால்ஸ்... என்றவாறு கூப்பனில் ☑ செய்து கவரின் மேல் ஒட்டி, உங்களின் முழு முகவரி, தொலைபேசித் தொடர்பு எண் ஆகியவற்றைக் கட்டாயம் எழுதி அனுப்பவும்.

**கடிதங்கள் வந்து சேரவேண்டிய கடைசித் தேதி : 22.05.2010**

**கலக்க வருதுப்பா கல்கி**
**தர்மபுரி - கிருஷ்ணகிரி மாவட்டங்கள்**

☐ நியூஸ் ஏந்தி பவன் ☐ பெட்டிஷன் பாக்ஸ்
☐ வேடந்தாங்கல் ☐ ஜோக் ஃபால்ஸ்

47, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

# நீங்க ச்சும்மா கோடு போடுங்க...
# நாங்க உடனே ரோடு போடறோம்!

## திருமணமாகி ஐந்து வருடங்களுக்குப் பிறகு

# இரு முகங்கள்

**கணவன்:**

“ஏழு முறை காலிங்பெல்லை அடிக்கறதுக்கு முன்னாடி வாசக் கதவை திறக்கக்கூடாதுன்னு சபதமா? அப்படி என்னத்தை பெரிசா மலய பேத்து வச்சிண்டிருக்கியோ. மனுஷன் களைச்சுப் போய் ஆபீஸ்லேர்ந்து வந்தா, அஞ்சு நிமிஷம் வெளியில நிக்கணும்! இதுதான் வீடா? அம்பாரமா துணி ஒரு பக்கம், விளையாட்டுச் சாமான் போரா இன்னொரு பக்கம். இந்த வீட்டுல ஒழுங்கா சாமானை அடுக்கி வக்கிற பழக்கமே இல்லியா? ச்சே... இந்தப் படுக்கைல உட்காரவே முடியலை. ஒரே மூத்திரநாத்தம். அங்கே இங்கேன்னு சானா சுருணையெல்லாம் தோய்ச்சு உலர்த்தினா இப்படித்தான் நாறும். படுக்கையை எடுத்து கொஞ்ச நாழி வெயில்ல போடறது... ஆனா உனக்குத்தான் வருஷத்துல பன்னெண்டு மாசமும் மூக்கடைப்பாச்சே! ஒரு நாத்தமும் வாசனையும் தெரியாதே!''

''...எப்பப் பாரு குழந்தைகளிடம் ஒட்டிண்டு உட்கார்ந்திரு. எங்கம்மா ஏழு ஏழு குழந்தைகளை பெத்து வளர்த்தா. அப்படியும் வீடு துப்புரவா இருக்கும். ரெண்டு குழந்தைகளை பெத்துட்டே! வீடு இருக்கற அலங்கோலத்தை பார்த்தா, ஒரு பெரிய கிரிக்கெட் டீமையே வளக்கற மாதிரி...''

''திரும்பவும் அதே சர்பத்தா? உனக்கு நன்னாத் தெரியும், எனக்குத் தொண்டை சரியில்லேன்னு... ஜில்லுன்னு தம்ளரைக் கையில கொடுத்துட்டு போனா என்ன அர்த்தம்? சூட்சுமமா எப்பத்தான் நடந்துப்பியோ? போ... போய் டீ எடுத்துட்டு வா. ஆங்... இன்னொரு விஷயம்... இனிமேல் நா வந்தவுடனேயே சர்பத் கொடுத்துட்டு, எதிர்ல வந்து நிக்காதே. நோய்வாய்ப்பட்டு படுக்கறதை இப்ப என்னால சப்போர்ட் பண்ண முடியாது. ஆனால் உனக்கெங்கே புரியப் போறது... உனக்கு, உன்னை மாதிரியே பூரா உலகமுமே ஸ்லோமோஷனில் தெரியறது...''

''நாள் முழுக்க வீட்லே ஏன் அடைஞ்சு கெடக்கே? கொஞ்சம் வெளியில காத்தாட போயிட்டு வரது..! அழகா ட்ரஸ் பண்ணிக்கோ! தலையை வாரிக்கக்கூட டயமில்லேன்னா முடியை கட் பண்ணித் தொலை! மூஞ்சியும் அழகா மாறுமில்லே? அக்கம்பக்கத்துல இருக்கற படிச்ச பொம்பளைங்க கூடப் பழகு...''

''அப்பாவுக்கு சாப்பாடு போட்டியா? எத்தனை தரம் சொல்றது, அவருக்கு லேட்டா சாப்பிட்டா ஜீரணமாகாதுன்னு. டயத்துக்கு

இந்தி மொழியில்: சுதா அரோரா
தமிழில்: லதா சேகர்

போடு... என்ன கொடுத்திட்டியா? சொல்லித் தொலைச்சா என்னாயிடும்? வாயத் தொறந்து சொல்லல்லேன்னா எனக்கு எப்படித் தெரியும்?''

''சரி... சரி, அந்தப் புத்தகத்தை எங்க வச்சே? டேபிள் மேல இதே... எல்லாம் எடத்துலயும் பார்த்துட்டேன். ஒழுங்கா ஒரே இடத்துல வச்சா என்னாயிடும்? உன்னையைப் போய்ப் படிக்கச் சொல்லி அபராதம் பண்ணிட்டேன். இனி அந்த புக்கு கெடச்ச மாதிரிதான். ஒரு புத்தகம் படிக்கறதில்ல... நாள் முழுக்க உப்பு, அடுப்பு, என்னென்னு அவிய வேண்டியது... எழுதறது படிக்கறது எல்லாம் உடைப்புல போட்டுடறது...''

''இது ஒரு சாப்பாடா? தினமும் அதே சப்பாத்தி, தால், வெண்டை, கத்திரி, ஆலுன்னு... நம்ம நாட்டுல வேற காயே கெடைக்காதா? பட்டாணியில ஆலு. காலிஃப்ளவர்ல ஆலு, வெந்தியக் கீரைல ஆலு... எல்லாத்துலயும் ஆலு! நல்லா ருசியா சமைக்கிறியான்னா அதுவும் இல்ல. போ! போய், உன் அம்மா வீட்ல இருந்துட்டு வா... சமையலைக் கத்துட்டு வா. உன் அம்மா என்ன டேஸ்டியா சமைக்கறாங்க! உனக்கு ஒன்னுமே கத்துத் தரல்லயா? சைன்ஸ், காண்டினென்ட்டல்ன்னு எப்ப பண்ணி தரப் போற? வெரைட்டி வேணாம் சாப்பாட்டுல?''

''அதான் ரெண்டு பேரும் தாங்கிட்டாங்க இல்ல... இங்கே பக்கத்துல வர்றது.. என் கிட்ட வர மாத்திரம் உன் கிட்டே டயமேயிருக்காது. ஆங்.. போ போய் அப்பா வுக்கு மாத்திரை கொடுத் துட்டு வா. இல்லேன்னா குரல்கொடுப்பார்.''

''வா... பக்கத்துல உட் காரு... இப்பச் சொல்லு. எனக்கு எத்தனையோ வரன் வந்தும் உன் னைத்தான் கல்யா ணம் பண்ணிக் கணும்னு என்



தேர்வு செய்தேன்? ஏன்னா நீ படிச்சவ, சங்கீதத்தில தேர்ச்சி, கலைலே இன்ட்ரஸ்ட்... அப்புறம் உன் வீட்டுச் சுவர்களில் நீ வரைஞ்ச லேண்ட்ஸ்கேப் பார்த்தேன்... இப்ப எப்படி மாறிப் போயிட்டே. நாலு புத்தகம் வாங்கிக் கொடுத்தேனே, புரட்டியாவது பார்த்தியா? இந்த மாதிரி இருக்கற பொண்டாட்டிங்களோட புருசனுங்கதான், வேற பொம்பளையைத் தேடிப் போயிடறாங்க! அப்பால கண்ணீர் விடறீங்க. ஆனால் தன்னைத் திருத்திக்க மட்டும் முயற்சியே எடுக்க மாட்டீங்க."

"உன்னோட புடைவையிலிருந்து கூட எண்ணெய், மசாலா வாசனையும் பேபி ஃபுட் வாசனையும் வருது... தூங்க வர்றதுக்கு முன்ன குளிச்சுட்டு வர்றதுக்கென்ன... உனக்கும் க்ளீனா இருக்கும்... பிறகு... இத பாருடா... நா பாட்டுக்கு பேசிண்டிருக்கேன்... நீ தூங்கிட்டியா.. மணி பத்தரைதானே ஆகறது? இது உறங்கற நேரமா? வீட்டு வேலை செஞ்சு களைச்சுப் போயி 'வேறு எதுக்கும்...' லாயக்கில்லாம போயிடு."

**திருமணமான 15 வருடங்களுக்குப் பிறகு:**

"உன்னோட பழக்கவழக்கங்கள் மாறவே மாறாது. கல்யாணம் ஆகி பதினைஞ்சு வருஷம் ஓடிப் போயிடுச்சு. ஆனால் நீ ஒண்ணுமே கத்துக்கலலே. மனுஷன் களைச்சுப் போய் வந்தா ஒரே பெல்லுல ஓடி வந்து கதவைத் திறக்க மாட்டே? ஏன்தான் அந்தக் கோடி ரூமுல அடைஞ்சு கெடக்கிறியோ? வெளில வர்றதுக்கு இவ்வளவு நாழியாக்கறே... நா ஆபீசுலேர்ந்து வர்ற நேரம் ஏன் இங்க சோபாவுல உட்கார மாட்டேங்கற?"

"இது வீடா? டேபிளில் ஆஷ்ட்ரே கெடையாது. பாத்ரூமில் துண்டு இருக்காது. எங்க பாரு புக் புக் புக்ஸ்தான். டேபிள், ஷெல்ஃப், படுக்கை, கார்பெட், கிச்சன், பாத்ரூம்னு எங்கே பார்த்தாலும் புக்ஸ்தான். புத்தகத்தையே உடுத்திண்டு போத்திண்டு, சாப்ட்டுண்டு இருக்கணுமா?"

"..இது டீ குடிக்கற நேரமா? சாப்பாடு எடுத்து வை. ஏற்கெனவே வெயில் கொளுத்தறது. இதுல டீயைக் கொண்டு வந்து கையில கொடுத்துடுவ. எப்போதேனும் சில்லுன்னு லெமன் ஜூஸ் கொடுக்கலாமேங்கிற எண்ணமாவது இருக்கா?"

"இங்கே என்ன இவ்வளவு நியூஸ் பேப்பர் கிடக்கு? ஊர்ல வெளியாகிற அத்தனை நினைசியையும் படிச்சாகணுமா? செய்திகள் எல்லாத்துலயும் ஒரே மாதிரிதானே வர்றது. படிக்கணும்ங்கற வெறி தலைக்கேறிடுத்து உனக்கு. வீடு என்ன நிலைமைல இருக்கு, குழந்தைகள் எங்கே போறாங்கன்னு உனக்கு நெனைப்பு இருந்தாத்தானே?"

"இது ஒரு சாப்பாடா? டெய்லி சூப்பைக் குடிச்சுட்டு போராயிட்டேன். பேக்டு, பாயில்ட் வெஜிடேபிளை சாப்பிட்டு நாக்கு செத்துப் போச்சு. வீட்டுல ஹோட்டல் மாதிரி சாப்பிட முடியுமா? நியூட்ரிஷன் டயட் கான்ஷியஸா இருக்கணுமா? சிம்பிளா சப்பாத்தி தால் பண்றதுக்கென்ன? வீட்டுச் சாப்பாடு சாப்பிடற மாதிரி ஃபீல் வரும். வர வர இந்தக் காலத்து பொம்பளைங்க, நம்ப நாட்டு மசாலா, உணவு வகைகளையே மறந்துட்டு வர்றாங்க..."

"இதென்ன, என்னோட செருப்பை ரிப்பேர் பண்ணலையா? எலக்ட்ரிஸிடி பில்லும் கட்டலலே. வீட்டுல வணங்கி



உட்கார்ந்தாந்தானே... ஸ்கூல்ல வேலை செய் யற; அது போறாதா? சமூகசேவைன்னு வேற கௌம்பிப் போயிடற. இது புது வியாதி. அந்த பீந்த சோஷல் ஸர்வீஸ் ஆபீஸுக்கு எதுக்குப் போற? வெறும் ஹிப்போக்கிரேட் லேடீஸ்தான் அங்க இருப் பாங்க... உனக்கென்ன கெடைக்கறது? காசும் கிடையாது; மண்ணும் கிடையாது. இந்த லட்சணத்துல கைக்காசை செலவழிச் சுண்டு போக்குவரத்துச் செலவு வேற..."

"உன் செல்ல மகனோட ரிப் போர்ட் கார்ட் பாத்தியா? பூகோளத் துல இருபத்தி மூணு, வரலாறுல இருபத்தி ஐந்து, கணக்குல பன்னண்டு... ஃபெயில் ஆயிருக் கான். அம்மாக்காரிக்கு தன் பிள் ளைக்கு பாடம் சொல்லித் தர நேரமில்லை. நான் நாள் முழுக்க வேலை செஞ்சு அலுத்து சலிச்சு வந்த பிறகு, பாடம் சொல்லித் தருவேன்னு எதிர்பார்க்காதே. எம்.ஏ. கோல்டு மெடலிஸ்ட்! ஆனால் தன்னோட புள்ளைங்களுக்கு பாடம் சொல்லித் தர முடியல்ல உனக்கு. இந்தப் புது இனுக மாத்ஸ் வரல் லேன்னா ட்யூட்டர் வை. இப்பத் தான் சம்பாதிக்க ஆரம்பிக்கட்டியே! கண்ட சமூக சேவைல வாரி இறைக் கறதுக்கு பதிலா குழந்தைகளைச் சரியா ஒழுங்கா வளக்கறதுல செலவழி... நாள் முழுக்க எம்.டீ.வி. பார்த்துக் கெட்டு போயிட்டிருக்காங்க."

"நீ என்ன தலைமுடியை இப்படிச் சின்னதா கட் பண்ணிட்டிருக்கே. எங்கிட்டே ஒரு வார்த்தை கேட்டியா? இந்தச் சின்ன ஹேர்கட்ல ரொம்ப அழகா இருக்கோம்னு நெனைப்பா? யூ லுக் ஹாரிபிள்... உன் வயசுல இன்னும் பத்து வருஷம் கூடிட்டா மாதிரியிருக்கு. நம்ப ரூமுக்கு சூட் ஆகறதா இல்லையா, அந்த கவலையே கெடையாது! உனக்கு ஃபாஷன் கண்டிப்பா பண்ணியாகணும்."

"தூங்க வேணாமா? மணி பன்னெண்டு ஆகறது. என்னமோ இப்பல்லாம் விழுந்து விழுந்து படிக்கறே! உனக்குத் தூங்க வேணாம்னா வேற ரூம்ல போய்ப் படி. லைட்டை அணைச்சு என்னைத் தூங்க விட் டாலே உனக்குப் புண்ணியமாப் போகும். கையிலேர்ந்து புத்தகத்தை எடுக்கப் போறியா இல் லியா? உண்மையைச் சொல்றேன்; எனக்குக் கோபம் தலைக்கேறி டுச்சுன்னு வச்சுக்கோ, அத்தன புத்தகத்தை யும் தூக்கி இந்த ஜன்னல் வழியா வெளில எறிஞ்சுடுவேன். அப்புறம் பாக்கறேன் எப்படி..."

**படிக்கலேன்னா, இந்த ஜன்மமே முழுமையாயிடாத மாதிரி... நீ என்ன வேணா படி. உன்னோட புத்திக் கூர்மையாகப் போறதில்லை.**



"கதையாயிருக்கே.. நா பாட்டுக்கு பேசிட்டே போறேன். உன் காதுல ஏறவேயில் லையா? அப்படி என்ன படிக்கறே? படிக்கல் லேன்னா, இந்த ஜன்மமே முழுமையாயிடாத மாதிரி... நீ என்ன வேணா படி. உன்னோட புத்தி கூர்மையாகப் போறதில்லை. நீ அப் படியேதான் இருக்கப் போறே... மாற்றமே யில்லாமே..." ●

# நூல் அறிமுகம்



**ஸ்ரீ கிருஷ்ண மகிமை - ஆசிரியர் : துரை.விஜயகுமார், வெளியீடு : வானதி பதிப்பகம், 23, தீனதயாளு தெரு, தி.நகர், சென்னை - 600 017. விலை ரூ.45/-**

ஸ்ரீ மகாவிஷ்ணுவின் அவதாரமான ஸ்ரீ கிருஷ்ணனை, பரிபூர்ணாவதாரம் என்பது மரபு. அந்த வகையில், ஸ்ரீ கிருஷ்ணாவதாரத்தின் லீலைகளை அனுபவித்து எழுதியிருக்கிறார் ஆசிரியர். ஸ்ரீமத் பாகவதத்தின் கதைகளை மட்டுமே கூறிச் செல்லாமல், கிருஷ்ண பக்தர்களின் சரிதத்தையும் ஆங்காங்கே கலந்து சுவைபடச் சொல்லியிருக்கிறார். மற்றைய அவதாரங்களையும் சுருக்கமாகச் சொன்ன விதம் சிறப்பு. பில்வமங்களரின் பக்தி, குசேலன் கதை, காயத்ரி மந்திரம், மீராவின் பக்தி... என்று பல அம்சங்கள் சரள நடையில் அமைந்துள்ள புத்தகம்!

**யாரோ ஒருத்தியின் டைரிக் குறிப்புகள் - ஆசிரியர் : நிலா ரசிகன். வெளியீடு : த்ரிசக்தி பப்ளிகேஷன்ஸ், கிரிகுஜா என்கிளேவ், 56/21, முதல் அவென்யு, சாஸ்திரி நகர், விலை ரூ.70/-**

எழுதுபவனுக்குப் பேனா மீதான காதல் மாற்றமுடியாத வசீகரம்! அந்தப் பேனா தொலைந்து போவதில் இருந்து, பேனாவின் முனையை நீதிபதி முறிப்பது வரை ஒவ்வொரு செய்தியையும் கதையோட்டமாக்கியிருக்கிற அழகு சுவாரஸ்யம்! பதினேழு சிறுகதைகளின் தொகுப்பாக வெளியிடப்பட்டிருக்கிற நூல்! வாழ்வியலில் எதிர்ப்படும் ஒவ்வொரு சம்பவத்துடனும், தனது கிராமிய நினைவுகளையும் பிணைத்திருக்கிறார் ஆசிரியர். முரணான இன்றைய நடைமுறை வாழ்விலிருந்து தப்பித்தல் நிலையைத் தருவதாகச் சொல்வதில் நிறைய அர்த்தமிருக்கிறது தொகுப்பை வாசிக்கும்போது!

## வாழ்விலிருந்து தப்பித்தல்...




**முப்பது வகை அசத்தல் சமையல் - ஆசிரியர் : சாந்தி விஜயகிருஷ்ணன் வெளியீடு : விகடன் பிரசுரம், 757, அண்ணா சாலை, சென்னை - 600 002. விலை ரூ.110/-**

எவ்வளவுதான் ஓடி ஓடி உழைத்தாலும், அதன் முதல் நோக்கம் உணவுதான். அந்த வகையில் முப்பது வகையான உணவு வகைகளைச் சமைக்கும் விதத்தை விவரிக்கிறார் இந்தப் புத்தகத்தில். 'போளி'யில் முப்பது வகை, முப்பது வகையான கேரட் ரெசிபி, தயிர் மற்றும் மோரைப் பயன்படுத்தி முப்பது வகை உணவுகள், இதைப் போன்றே கத்தரிக்காய், வெண்டைக்காய் என்று விரிகிறது. தினம் ஒரு வெரைட்டி என்று கணக்கிட்டிருப்பார் போலும். சர்க்கரை நோயாளிகளுக்கான ஸ்பெஷல் ஸ்நாக்ஸ் மற்றும் சமையலறை டிப்ஸ் கூடுதல் அட்ராக்ஷன்.

**- ராகவன்**

பிறப்பிலே நான் சூரியன்
பிரளயம் என் பாடல்கள்
நெருப்பிலான காகிதம்
நீர்மையும் என் ஆயுதம்...
திருப்பங்கள் என் பாதைகள்...
திசைகள் எல்லைக் கோடுகள்...
இருப்பினை நான் காட்டுவேன்
எட்டுத் திக்கும் உதயமே...

இடிமுழங்கும் வானிலே
எழுத்தை மின்னல் ஆக்குவேன்
செடிகள் தோறும் கற்பனை
சிந்தும் பூக்கள் ஆகுவேன்
விடியும் காலை வேளையில்
வெளிச்சம் எந்தன் பாக்களே...!
முடிவிலாதக் கடலிலே
மூளும் எண்ண அலைகளே...!

கடிது ஒச்சி எறிவதால்
காயம் செய்யும் சொற்களும்
மடிதுயில்கள் யாவையும்
மரணமாக்கப் பாடுவேன்
விடுதலையின் திசைகளில்
விரியும், வானின் சிறகுகள்
இடதுசாய்வில் துடிக்குமே
இதயமுள்ள வார்த்தைகள்.

தேதியற்ற வானம் நான்
தினமும் புதிதாய் விடிகிறேன்...
ஏதுமற்ற வெளியிலே
எதுவுமாகித் தோன்றுவேன்...
பாதமற்றக் காற்றுநான்
பயணம் செய்வேன் ஜீவனுள்...
சேதமுற்று நிற்கிறேன்
சிந்தை செய்து போற்றுங்கள்...




# கவிதையின் வாக்குமூலம்!



ஆரூர்புதியவன்

"சென்னையில் பார்க்க வேண்டிய இடங்களைச் சொல்லுங்க"

"மெரீனா பீச், மியூஸியம், அண்ணா சமாதி, வண்டலூர் ஜூ"

"அட... இதைவிட்டா வேற ஒண்ணும் இல்லையா?"

"எங்க பார்வைக்கு அகப்படாத அதிரசம் கணக்கா ஏதாவது இடமிருக்கா?"

"பழைமையான இனிப்பு அதிரசத்தைப் போல, பழைமையும் முக்கியத்துவமும் கூடிய இடங்கள் உண்டுப்பா சென்னையில..."

"அப்படியா?"

"நான் கால்நடையாவே சென்னை வாசிகளை 'ஹெரிடேஜ் வாக்' என்ற பெயரில் அழைச்சிட்டுப் போறேன்."

"சரி, அப்போ என்னையும் சென்னை சிற்றுலா கூட்டிட்டுப் போங்க."

(எழுத்தாளர் ஸ்ரீராம் உடன் சந்திரமௌலி பயணித்த 'ஹெரிடேஜ் வாக்' டீடெய்ல் கீழே...)

### ஆர்மேனியன் சர்ச்

ஐரோப்பாவில் உள்ள சிறிய நாடு ஆர்மேனியா. பதினேழாம் நூற்றாண்டின் இறுதியில், சென்னையில் ஆர்மேனிய நாட்டைச் சேர்ந்தவர்கள் கணிசமான எண்ணிக்கையில் வசித்திருக்கிறார்கள். அவர்கள் வழிபாட்டுக்காக 1690-ல் கட்டிய சர்ச் இன்றைக்கும் பாரிமுனை பகுதியில் இருக்கும் ஆர்மேனியன் தெருவில் நெடிதுயர்ந்து நிற்கிறது. உயரமான டவர், கம்பீரமான மணி மாடம், உட்புறங்களில் வண்ணமயமான கண்ணாடி ஜன்னல்கள், மேற்கூரைப் பகுதிகள், பாரம்பரிய ஓவியங்கள்



* ஸ்ரீராம்

## -ஹெரிடேஜ் வாக்

என்று ரசிக்கத்தக்க விஷயங்கள் பல ஆர்மேனியன் சர்ச்சில் உள்ளன.

மிகவும் பலமான, தடித்த சுவர் கொண்ட சர்ச்சுக்குள்ளே கதவைச் சாத்திக் கொண்டு நின்றால், நாம் சந்தடி மிகுந்த பாரிமுனை பகுதியில் இருக்கிறோம் என்பதே துளியும் தெரியாது. அந்த அளவுக்கு நிசப்தம் நில வும். அப்படி நிற்பது ஒரு அதிசய அனு பவம்.

### விக்டோரியா பப்ளிக் ஹால்

சென்ட்ரல் ரயில் நிலையம் அருகில் இருக்கும் விக்டோரியா பப்ளிக் ஹால் தற்போது புதுப்பிக்கப்பட்டு வருகிறது. சென்னை மாநகராட்சியின் கட்டுப்பாட்டில் இருக்கும் இந்த அரங்கில்தான், சென்னை நகரில் முதன்முதலில் சினிமாக்கள் திரையிடப்பட்டன. பம்மல் சம்மந்த முதலியாரின் நாடகங்கள் எல்லாம் இங்கே நடந்துள்ளன. முதன் முதலாக அறிஞர் அண்ணாவும், எம்.ஜி.ஆரும் சந்தித்துக் கொண்டது கூட விக்டோரியா அரங்கத்தில்தான். அண்ணாவின் நாடகத்தைப் பார்க்க வந்த எம்.ஜி.ஆர். நாடகம் முடிந்து அவரைச் சந்தித்துப் பேசினார்.



* விக்டோரியா பப்ளிக் ஹால்



# இங்கே போயிருக்கீங்களா?



* செனட் இல்லம்

## சென்னைப் பல்கலைக்கழக செனட் இல்லம்

1860-களில் சென்னை பல்கலைக் கழகப் பட்டமளிப்பு விழா மண்டபமாகக் கட்டப்பட்டது செனட் ஹவுஸ். இந்து-முஸ்லீம் மற்றும் கொதிக் என்று சொல்லக் கூடிய ஃப்ரெஞ்ச், ஜெர்மானிய கட்டடக் கலை என்று மூன்று வகையான கட்டடக் கலைகள் ஒன்று சேர்ந்த கலைக் கலவை தான் செனட் கட்டடம். ஒருகட்டத்தில் செனட் இல்லம் மிகவும் பழுதடைந்துவிட, சென்னையின் பாரம்பரியக் கட்டடங்களை அப்படியே பாதுகாக்க வேண்டும் என்ற ஆர்வம் கொண்டவர்களின் முயற்சியால், பாரம்பரிய வழிமுறையிலேயே புதுப்பிக்கப்பட்டு, இன்றும் பழைமையின் கம்பீரம் குன்றாமல் உள்ளது செனட் இல்லம்.

## உயர்நீதிமன்ற மியூஸியம்

சுமார் ஐந்து ஆண்டுகளாக சென்னை உயர்நீதிமன்ற வளாகத்தில் ஒரு மியூஸியம் இருப்பது, தினமும் உயர்நீதி மன்றத்துக்கு வருகிற பல வக்கீல்களுக்கே தெரியாது! ஆரம்பக் காலத்தில் சென்னை மாநகராட்சியின் மேயர்தான் உயர்நீதிமன்றத் தலைமை நீதிபதியாக இருந்தார். அப்போது பயன் படுத்தப்பட்ட வெள்ளி கதை, டவாலியின் உடைகள் போன்ற பொருட்கள், இந்த நீதிமன்றத்தின் முதல் கேஸ் சம்பந்தப்பட்ட கேஸ் கட்டு, நீதிபதிகள் அமரப் பயன்படுத்திய மெகா சைஸ் ஆசனங்கள், நீதிபதி அறைகளின் மாதிரிகள், விளக்குகள் என்று பல அரிய பொருட்கள் இந்த மியூஸியத்தில் இடம் பெற்றுள்ளன.



"என் நண்பனுக்கு வந்த அதிர்ஷ்டத்தைப் பார்த்தியா...?"
"ஏங்க... என்னாச்சு?"
"அவனோட பெண்டாட்டிக்கு கத்திரி வெயில்ல போயிட்டு வந்ததிலிருந்து 'கப்'புன்னு பேச்சு வர மாட்டேங்குதாம்!"

- கே.தண்டபாணி, கோயமுத்தூர்

" 'மதுரை அல்வா, காஞ்சிபுரம் இட்லி, மங்களூர் போண்டா, மலபார் அடை' எது சார் வேணும்?"
"முதல்ல ஜில்லுன்னு 'பூண்டி' தண்ணி!"

- வெ.சீதாராமன், சென்னை-5



# வெயிலி-



"செல்ஃபோனை சைலண்ட் மோடில் வைக்கிற மாதிரி, மனைவியை வைக்கிறதுக்கு ஏதாவது வழியிருக்கா டாக்டர்...?"

- ராஜிராதா, பெங்களூரு

"**வெ**ண்கொற்றக் குடை எங்கே?"

"வெயில் தாங்காமல் நம் இளவரசன் எடுத்துக் கொண்டு சென்று விட்டார் மன்னா!"

**- எம்.அசோக்ராஜா, திருச்சி**





"**நீ** திருட்டி சி.டியில் படம் பார்த்ததற்காக ஆறு மாதம் சிறைத்தண்டனை விதிக்கிறேன்!"

"அந்த மட்டமான படத்தைப் பார்த்ததற்கு இந்தத் தண்டனை போதாது. இதுக்கு மேலேயும் தண்டனை கொடுங்க எஜமான்!"

**- எஸ்.முகம்மது யூசுப், திருநெல்வேலி**

# வெளியேறிய பேச்சு!

"**வீ**ட்டோடு மாப்பிள்ளையா இருக்கத்தான் ஒத்துக்கிட்டியே, அப்படியும் ஏன் உன்னை வேண்டாம்னுட்டாங்க?"

"எங்க அப்பா-அம்மாவும் என் கூடத்தான் தங்குவாங்கன்னு சொன்னதும் தயங்கிட்டாங்க!"

**- சீர்காழி வி.ரேவதி**



## இளமைப் பாலம் 7

'நான் கனவு காண்கின்றேனா, அல்லது நான் இன்னொருவருடைய கனவில் வரும் பாத்திரமா?'

**'ஆலிஸின் அதிசய உலகம்'**

இரண்டு நாட்கள் முன்பு, காலையில் 'வாக்கிங்' போகும்போது ஒரு காட்சியைக் கண்டேன். கையில் 'காமிரா' இருந்திருந்தால், படம் பிடித்திருப்பேன்.

இருள் பிரிந்தும் பிரியாத விடியற்காலை. ஒருவன் ஒரு வீட்டுச் சுவரோரத்தில், ஒரு மரத்தருகே நின்றுகொண்டு சிறுநீர் கழித்துக் கொண்டிருந்தான். அவன் கையில் பிடித்திருந்த 'லீஷி'ல் ஒரு நாய். தெருவை வேடிக்கைப் பார்த்தவாறு சாவகாசமாய் நின்று கொண்டிருந்தது. அப்பொழுது அந்தப் பக்கம் வந்த இன்னொரு நாய், அதன் அருகே நின்று 'குசலம்' விசாரிக்கத் தொடங்கியது. சாதரணமாக, நாய் மரத்தருகே சிறுநீர் கழிப்பதும், அதைப் பிடித்துக் கொண்டிருக்கும் மனிதன், அந்தப் பக்கம் வரும் சிநேகிதனுடன் பேசிக் கொண்டு நிற்பதும் இயல்பான காட்சி.

ஆனால் இது, வித்தியாசமாக இருந்தது. நாய் மனிதனை 'லீஷி'ல் பிடித்துக் கொண்டு உலா வந்திருக்கிறதா, அல்லது, மனிதன் நாயைப் பிடித்துக் கொண்டு வந்தானா என்ற 'தோற்ற மயக்க' உணர்வா அல்லது 'கனவா' தெரியவில்லை- எனக்குள் ஏற்பட்டது.

மனிதனுக்கும் மிருகத்துக்கும் உள்ள வித்தியாசம், மனிதனால்தான், தூக்கத்திலும், விழிப்பு நிலையிலும் கனவு காண முடியும். மிருகங்களுக்கு இது சாத்தியமில்லை என்று நான் சில ஆண்டுகளுக்கு முன்பு வரை நினைத்துக் கொண்டிருந்தேன். பிறகு,

## நாமும்

டால்ஃபின்களும், மனிதக் குரங்குகளும் (primates) கூட சிக்கலான கனவுகளைக் காண முடியுமென்று விஞ்ஞானிகள் நிரூபித்தார்கள்.

சமீபத்தில், எலிகளாலும், அவற்றினுடைய விழிப்பு நிலை அநுபவங்களை உறங்கும்போது, கனவுகளாகக் காண முடியுமென்று அமெரிக்கா எம்.ஐ.டியைச் சேர்ந்த டாக்டர் மாத்யூ வில்ஸன், கென்வே லூயி என்கிற இரண்டு விஞ்ஞானிகள் கண்டுபிடித்திருக்கிறார்கள். எலி, தான் பகலில் பூனையிடமிருந்து சாகசமாகத் தப்பியதைக் கனவு காணலாம், 'மிக்கி மௌஸ்' போல.

* மார்ட்டின் லூதர் கிங்

## கனவு

ஆகவே பல விஷயங்களில், மனிதனுக்கும், மிருகத்துக்குமிடையே உள்ள இடைவெளி குறைந்து கொண்டே வருகிறது. ஒரு வேளை, மிருகம் மனிதனாகவும், மனிதன் மிருகமாகவும் மாறிக் கொண்டு வரலாம். நமது தொலைக் காட்சி செய்திகளைப் பார்க்கும்போதும், என்னுடைய 'வாக்கிங்' அநுபவத்தை வைத்துப் பார்க்கும்போதும், இரண்டாவதுதான் நடந்து கொண்டும் வருகிறதோ என்று எண்ணத் தோன்றுகிறது.



* ஒபாமா

கனவுக்கும் காதலுக்கும் நெருங்கிய உறவு உண்டு. 'கனவு நிலை உரைத்தல்' என்று வள்ளுவரே ஓர் அதிகாரம் காமத்துப் பாலில் பாடியிருக்கிறார். தலைவிக்கு நனவைக் (யதார்த்தம்) காட்டிலும்,

# கனவுதான்!

கனவே பிடித்திருக்கிறது. காரணம், கனவில் வரும் காதலன் அவளை விட்டுப் பிரிவதில்லை. யதார்த்தத்தில் பிரிகிறான். ஆகவே, 'நனவென்ற ஒரு பாவி' என்று பரிமேலழகர் உரை எழுதுகிறார், வள்ளுவர் பிறிதோரிடத்தில், 'அழுக்காறு (பொறாமை) எனவொரு பாவி' என்று கூறியிருப்பது போல. கனவில் அவன் வந்தால் போதும், நனவில் வர வேண்டாம் என்றும் இருக்கலாம்! இது அவன் காதலனா அல்லது கணவனா என்பதைப் பொறுத்த விஷயம்.

பொதுவாகவே, யதார்த்தத்தைக் காட்டிலும், கற்பனையும், கனவுகளும்தான் கவிஞர்களுக்கு இன்பம் தர வல்லன. யதார்த்தத்துக்கு, காலம், இடம், சமூக நியதி போன்ற வரையறைகளும், கட்டுப்பாடுகளும் இருப்பதனால், சிறகை விரித்து எல்லையற்ற கற்பனைப் பெருவெளியில், மனத்தடைகளின்றிப் பறக்க இயலாது. கனவில் இது சாத்தியம். நம் உள் மனத்தில், யதார்த்தமென்ற ஒரு பாவியினால், தடைகளுக்கு உட்பட்டிருக்கும் வரம்பற்ற ஆசைகளும், ஆதங்கங்களும், கனவு நிலையில் விழித்தெழுகின்றன. உடம்பு உறங்குகின்றது. உள் மனத்துக்கு ஓய்வில்லை. 'யதார்த்தத்தில், சமூக நியதியின் காரணமாக, மனிதன் தன்னுடைய இயல்பான



இந்திரா பார்த்தசாரதி

ஆசைகளையும், எண்ணங்களையும் அடக்கிக் கொள்ள வேண்டியிருக்கிறது; அடக்கப்பட்ட உணர்வுகள், உறக்கத்தின் போது தங்களைப் பலவிதமான குறியீடுகள் மூலம் அறிவித்துக் கொள்கின்றன. இவைதாம் கனவுகள். இவற்றின் ஆதாரத் தாயகம், 'பாலுணர்வு (sex)' என்று ஸிக்மன்ட் ஃப்ராய்ட் கூறுகிறார்.



● ஸிக்மன்ட் ஃப்ராய்ட்

ஆனால் அவருடைய ஒரு காலத்திய சிஷ்யர், கார்ல் யூங் கருத்தின்படி, 'தொடர்ந்து வரும் ஒரு சமூக மரபுப் பிரக்ஞையின் வெளியீடுகளாகிய தொன்மங்களின்(myths) குறியீட்டு(symbolic) நினைவுகளாகவும் கனவுகள் இருக்கக் கூடும்' என்பதுதான். "A dream is one's private myth and a myth is a public dream' என்கிறார் அவர்.

பாணாஸ்வரனின் மகள் உஷா. ஓர் அழகிய இளைஞன் அவள் கனவில் வருகின்றான். அவன் கிருஷ்ணனுடைய பேரன் அநிருத்தன். பிரத்யும்னனின் மகன். அநிருத்தன்மீது காதல் கொள்கின்றாள் உஷா. அநிருத்தன் தூங்கும்போது, அவன் கனவில் புகுந்து, அவனைக் கடத்திக் கொண்டு வந்து விடுகிறாள் அவள் தோழி சித்திரலேகா. பின் நவீனத்வக் கதைகள் பாகவதத்திலிருந்துதான் தொடங்கியிருக்க வேண்டும் என்று தோன்றுகிறது.

உதாரணமாக. சமூக நாடோடிக் கதையாக வழங்கும் 'ஜெகதலப் பிரதாபன்' வரலாற்றில், ஜெகதலப் பிரதாபன் ஒடுக்கப்பட்ட ஓர் இனத்தில் பிறந்த ஏழை இளைஞன். அவன் கனவு காண்கின்றான். என்ன கனவு? ' சொர்க்க உலகில், இந்திரகுமாரி இன்னிசை பாட, வருணகுமாரி கால்களை வருட, மலர் மஞ்சத்தில் அவன் பள்ளிகொண்டு, வாழ்க்கையை அநுபவிக்க வேண்டும்' என்று.. அவன் கனவாகிய அந்தரங்கத் தொன்மம், ஒடுக்கப்பட்ட அனைத்து இளைஞர்களின் கனவுக் குறியீடாக மாறி, தொன்மக் கதையாக உருப் பெறுகிறது. இதுவே அக்குறிப்பிட்ட சமூகத்தின் பகிரங்கக் கனவும் ஆகும்.

கனவு காணப் பெண்களுக்கும் உரிமை உண்டு என்பது போல, பாகவதத்தில் ஓர் அசுரப் பெண்ணும் கனவு காண்கின்றாள்.

தமிழ்ப் பெண் ஒருத்தியும் கனவு காண்கின்றாள். அவள் கனவு பேரனைப் பற்றியதன்று; தாத்தாவைப் பற்றியது. அந்தத் தாத்தாவின் விசேஷம் என்னவென்றால் அவர் என்றும் இளைஞன்! அவன்தான் கிருஷ்ணன். அவனை மணமகனாக வரித்து, அவனுடன் திருமணம் செய்து கொள்வதாகக் கனவு கண்டவள், சூடிக் கொடுத்த



ாச்சியார் என்றறியப்படும் ஆண்டாள். ஒரு திருமணப் பெருவிழா, இந்தக் காலத்து வீடியோ டக் காட்சிகள் போல், ஆண்டாளின் மனக்கண் றன், கனவாக விரிகின்றது.

நடக்க இருக்கும் திருமணத்தை முன் ட்டியே அறிவிக்கின்றது இக்கனவு..

**க**ம்ப ராமாயணத்தில், அசோக வனத்தில் றையிருந்த சீதையின் துயரைப் போக்கத் தான் ண்ட கனவை அவளுடன் பகிர்ந்து கொள்கிறாள் திரிசடை என்ற ஒரு பெண். வால்மீகி ராமாயணத் திலும் திரிசடை வருகின்றாள். ஆனால் அவளை ஒரு வயதான அரக்கியாகக் காட்டி, அவள் தன் னவை மற்றைய அரக்கிகளுடன் பகிர்ந்து கொள் வதாகச் சொல்லுகிறார் வால்மீகி. கம்பனின் இலக் ிய மந்திரக் கோல் அவளை விபீஷணனின் மக ளாகவும், சீதையின் உற்ற தோழியாகவும் காட்டு கிறது. அவள் சித்திரிக்கும் கனவு, சீதையின் வேத னையைத் தீர்க்கும் மாய மந்திரமாக ஆகிவிடுகின் றது!

ஷேக்ஸ்பியர் நாடகங்களில், கனவுகள் முக் கியப் பங்கை வகிக்கின்றன. ஜூலியஸ் ஸீஸரில், ஸீஸரை ஸெனட் கூட்டத்துக்குப் போக வேண்டா மென்று தடுக்கிறாள் அவன் மனைவி கல் பூர்னியா. காரணம், அவள் முதல் நாளிரவு நீக் னா காண்கின்றாள். அவன் அவள் சொல்வதை மீறிச் செல்கிறான், கொல்லப்படுகிறான். கொடுங் கோல் மன்னனாகக் காட்டப்படும் மூன்றாம் ரிச்சர்ட், போரில் கொல்லப்படுவதற்கு முன்னால் அவன் காணும் கனவில், அவன் கொன்ற அனை வரும் வரிசையாக வரு கிறார்கள்!

பண்டைய கிரேக்கக் கதைகளில், நிக்ஸ் என்ற இரவின் தெய்வம், ஹிப்னாஸ்( உறக்கம்), தன டோஸ் (மரணம்) என்ற இரட்டைப் பிள்ளைகளை ஈன்றெடுப்பதாகக் கூறப்படுகின்றது.

வள்ளுவரின் கருத்தோட்டம் இந்த விஷயத் தில் ஆக்கபூர்வமாக(positive) இருப்பதைப் பார்க்கலாம். உறக்கம் - மரணம் - பிறப்பு என்பது அவர் பார்வை. மரணம் ஒரு முடி வன்று. அதைத் தொடர்வது பிறப்பு. இந்நிலையில் அனைத்துமே கன வாகத் தோன்றுவதில் ஆச்சர்ய மில்லை... 'நாம் அனைவருமே தூக் கத்தில் முடியப் போகும் கனவுகள்' என்கிறார் ஷேக்ஸ்பியர் இன்னொரு நாடகத்தில்.

அரசியல் கனவுகளும் இருக்கின் றன. அமெரிக்கக் கறுப்பர்களின் தாரக மந்திரம், 'எனக்கொரு கனவு உண்டு'. ('I have a dream') என்ற ஒரு கூற்றுதான். மார்ட்டின் லூதர் கிங் (ஜூனியர்) கண்ட இக் கனவு, வெள்ளை மாளிகையில், ஒரு கறுப்பு இனத்தவரை இப்பொழுது அரிய ணையில் ஏற்றி வைத்திருக்கிறது.

*(அடுத்த வாரம்: **நாகரிகம்**)*



✱ ஷேக்ஸ்பியர்

**அமெரிக்க கறுப்பர்களின் தாரக மந்திரம், 'எனக்கொரு கனவு உண்டு' என்ற கூற்றுதான்.**

**அ**க்கா, ஆனாலும் அநியாயத்துக்குச் சூட்டிகை! கண் பார்த்ததைக் கை செய்யும்! கம்ப்யூட்டர் தெரியும்! எத்தனை பேருக்கானாலும் நறுவிசாய்ச் சமைக்கத் தெரியும்! ஓய்ந்த நேரத்தில் பனிக்கரடி பொம்மைகள் செய்வாள்! போன்ஸாய் ஆலமரம் ஒன்றை (நாலுவயசு) வளர்க்கிறாள்(!)... ம்...வியப்பதற்கென நிறையவே உண்டு அவளிடம்!

எட்டுக்கு ஆறு என்கிற கணக்கில் ஒரு ஹால்; அதன் காலை நேர நிழல் போல ஒரு அறை; எதிர்ப்புறம் சின்னதாய் ஒரு ஓட்டம்; இதுதான் வீடு -கூடு! இதில் எத்தனைக் குழந்தைப் படங்களை ஒருத்தியால் ஒட்ட முடியும்? முழுசாய் குனிந்துத் தன் காலிடுக்குகள் வழியே நம்மைப் பார்க்கிற குழந்தை; பிதுங்கிய உதடுடன் சிணுங்கிடும் ஒன்று; மல லாந்து, கால் கட்டை விரலை இழுத்துச் சுவைக்கும் வேறொன்று... அரச இலையைக் கையில் பிடித்தபடி மோனத் தவமிருக்கும் இன்னொன்று... பொம்மையொடு பொம்மையாய்... தண்ணீர் டப்பில் ஆட்டம் போடும் ஓர் அறுந்த வால்- பாத்ருமில்கூட.... நிஜத்தில்? குழந்தையில்லை!.... இயற்கையாய்ச் சாத்திய



ரோஷிணி

# குழந்தைகளுக்கு நடுவே வீடு!

மில்லை! மருத்துவத்தில் வேறு வழியில் முயற்சிக்கலாமே என டாக்டர் இதைப் படம் போட்டு விளக்கியபோதுகூட, அக்கா டாக்டரின் தலைக்கு மேல் தெரிந்த பால முருகனையே பார்த்திருந்தாள்....

வியர்க்க விறுவிறுக்க வந்து கதவு திறந்தாள். நெற்றிப் பொட்டு விழுவதற்கு ஆயத்தமாய்த் தொத்திநின்றது. வெல்லப் பாகு வாசனையை ஃபேன் விசிறியடித்துக்கொண்டிருந்தது! "இன்னும் காயலை; பார்த்து அடிவைக்க வா," என்றபடி கைப்பையை வாங்கிக்கொண்டாள்...

தூக்கிவாரிப்போட்டது ரவிக்கு! ரங்கோலியாகவோ, இழைக் கோலமாகவோயில்லாமல், உள்ளங்கைகளைக் குவித்துத் திருப்பி,"மாவில் தோய்த்து சின்னஞ்சிறு கால்களாகத் தரையில் ஒற்றிக் கொண்டிருந்தாள்! சித்திரை மாதத்தில்! என்ன அர்த்தம்?

வேறேதும் டாக்டரிடம் போயிருப்பாளோ?

"என்ன விசேஷம்?" என்றான் அடக்க மாட்டாமல்...

"கிருஷ்ண ஜெயந்தி--நமக்கு மட்டும்!" அழுத்தமாய்ப் புதிர் போலச் சொல்லி அவசரமாய் நகர்ந்து போனாள். திரும்பி வந்தவள் கையில் காப்பி...

"உன் ட்யூஷன் செல்லப் புள்ளைங்கல்ல எதுக்காவது பர்த்டேயா?" கிளறினான்.

மறுப்பாய்த் தலையாட்டினாள்.

"க்கா... டாக்டர்ட்ட போனியா?" கேட்டேவிட்டான்!

"ப்ச்! இல்லைடா..."

"ஏதாவது ஹோம்லேர்ந்து தத்து எடுத்துக்கலாம்னா?"

"அப்படி நினைச்சுகிட்டுதான் ரவி போனோம்! ஆனா, அங்க போனப்புறம் நிறைய யோசனையாயிடுச்சு!"

"ஒத்து வருமான்னா?"

"ம்ஹூம்! பத்து குழந்தைங்களை வரிசையா நிறுத்தி வைச்சுக்கிட்டு 'ச்சூஸ் த பெஸ்ட்'ங்கிறது எனக்குக் கஷ்டமாப் பட்டுதுடா! துணிக்கடையா சொல்லு?! இதெல்லாம் வேணாம்னு ஒண்ணை மட்டும் எடுத்திட்டு, மத்தெல்லாத்தையும் ஒதுக்கித் தள்ளிட்டு வரதுக்கு?"

"ஓ. பத்தையுமே எடுத்துடலாம்னு ஐடியா பண்ணிருப்பியே, நீ யாரு?!"... என்றான் சிரிப்பை அடக்க முயன்றபடி...

"ம்... ஏறக்குறைய அப்படித்தான்... வாரின்னுட்டு கொண்டு போயிருந்த சாக்லேட்டை மட்டும் கொடுத்தோம் நானும் மாமாவும்; அப்பதான் சொன்னாங்க- அங்க- மேனேஜ்மென்ட்ல உள்ள ஒரு மேடம் ரிடையராகறாங்களாம்... 'இஃப் யூ ஆர் இன்ட்ரெஸ்ட்டட், யூ கேன் அப்ளைன்னாங்க'; பட்டுன்னு ஒரு அப்ளிகேஷனைப் போட்டேன்... ஜாயின் பண்ணிக்கச் சொல்லிட்டாங்க. அங்கயே குவார்ட்டர்ஸ் உண்டாம்... மாமாவும் சரின்னு சொல்லிட்டாங்க ரவி!".......

"அதானா? 'இன்னைக்கு கிருஷ்ண ஜெயந்தி'?"

"ம்.... ம்.... இன்னிலேர்ந்தே கிருஷ்ண ஜெயந்திதான்!"... மலர்ச்சியாய்ச் சிரித்தாள்!

வீடு முழுக்க படங்களால் குழந்தை நிரம்பி இருந்தது. இப்போது வேறு விதமாய் குழந்தைகளுக்கிடையே வீடு என்பதாய் பலிக்கிறது. அக்காவை ஆச்சரியம் பொங்கப் பார்த்தான் ரவி. o

புராதனக் கோயில்களா? பசுமையான மலைகளா? அடர்ந்த காடுகளா? வனவிலங்கு சரணாலயங்களா? நீர் வீழ்ச்சிகளா? அலையடிக்கும் பீச்சுகளா? உங்கள் சாய்ஸ் எதுவானாலும், இந்தியாவில் எல்லாமே உள்ளன. வீட்டில் உட்கார்ந்துகொண்டே, இன்டர்நெட் மூலமாகவோ, டூர் ஆபரேட்டர்கள் மூலமாகவோ, நீங்கள் செல்ல விரும்பும் இடத்துக்கு ஒரு பயணத் திட்டம் போட முடியும். இந்தியாவிலுள்ள அனைத்து மாநிலங்களின் சுற்றுலாத்துறையினரும், பல்வேறு வகையான பேக்கேஜ் டூர்களை நடத்துகிறார்கள். நீங்கள் போக விரும்பும் இடம், தங்கும் நாட்கள் இவற்றுக்கேற்ப உங்களுக்கென்றே பிரத்யேகமாக டூர் திட்டம் போட்டுக் கொடுத்து, அதற்கான ஏற்பாடுகளைச் செய்து கொடுப்பவர்களும் உண்டு. மாதிரிக்கு சில பட்ஜெட் டூரிஸ்ட் ஸ்பாட்கள் உங்கள் விரல் நுனியில்...

## ஜலகம்பாறை நீர்வீழ்ச்சி

வேலூர் மாவட்டத்தில் சவ்வாது மலைப் பகுதியில், இருக்கிறது ஏலகிரி. இங்கு படகுச் சவாரி, பாரா கிளைடிங் போன்ற பொழுது போக்கு மற்றும் சாகச சுற்றுலா வசதிகள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. இந்தப் பகுதியில் உள்ள பீமன் நீர்வீழ்ச்சி, அமர்திவி நீர்வீழ்ச்சி, ஜலகம்பாறை நீர்வீழ்ச்சி, வனவிலங்கு பூங்கா போன்றவை சுற்றுலாப் பயணிகளை ஈர்க்கும் அம்சங்கள்.

போளூர், திருப்பத்தூர், வேலூரிலிருந்து போக்குவரத்து வசதி உண்டு. இப்பகுதியில் யானை மற்றும் வனவிலங்கு நடமாட்டம் உண்டு என்பதால், இரவுப் பயணத்தைத் தவிர்ப்பது நல்லது. இருவர், இரண்டு நாட்களுக்கு சென்னையிலிருந்து ஏலகிரி சுற்றுலா சென்றுவர சுமார் மூவாயிரம் ரூபாய் ஆகும்.

ஹிமாசலப் பிரதேசம் என்றாலே - நினைவுக்கு வருவது சிம்லா, குலு மணாலி தானே? ஆனால், ஹிமாசலப் பிரதேசத்தில் இன்னும் பல சூப்பரான சுற்றுலாத் தலங்கள் உள்ளன. டல்லௌசி, சம்பா, பராம்பூர், தர்மசாலா போன்றவை அவற்றில் முக்கிய இடங்கள். டல்லௌசி ஓர் அற்புதமான கோடை வாசஸ்தலம். சம்பாவில் சம்பா ஏரி, லட்சுமி நாராயண் கோயில், சரோல் கார்டன், அற்புதமான இமாலயக் காட்சிகளை வழங்கும் சலூனி என்று பார்க்க நிறைய உண்டு. பராம்பூர், தர்மசாலாதான் தலாய் லாமாவின் தலைமை இடம். இதைத் தவிர பல நீர்வீழ்ச்சிகளும் கோயில்களும், கோட்டைகளும் உண்டு. டெல்லியிலிருந்து இருவர் பட்ஜெட் டூர் சென்று வர ரூபாய் பத்தாயிரம் ஆகலாம்.

டல்லௌசி




மலபார் எனப்படும் வடக்கு கேரளாவில் இருக்கும் முக்கிய சுற்றுலாப் பகுதிகளில் ஒன்று வயநாடு. கபினி நதியின் இயற்கைப் படைப்பான குருவதீப் தீவு, திருநெல்லி விஷ்ணு கோவில், பட்சிப் பாதாளம், கொட்ட முண்டா ஜைன கண்ணாடிக் கோவில், செம்பரா மலைச் சிகரம், பனசுரா அணை, மீன்முட்டி நீர்வீழ்ச்சி, பேகுர் வனவிலங்கு சரணாலயம், எடக்கல் குகைகள் என்று பார்க்க வேண்டிய இடங்கள் நிறையவே உண்டு. யாத்ரி ரிசார்ட்டில் மெகா சைஸ் மரங்களில் அமைக்கப்பட்ட வீடுகளில் தங்குவது புது அனுபவமாக இருக்கும்.

கேரளா டூரிசம் அலுவலகங்களில் கலந்தாலோசித்து உங்களுக்கென்று பிரத்யேக டூர் புரோகிராம் போட்டுக் கொள்ளுங்கள். கோழிக்கோடு ரயில் நிலையத்திலிருந்து உங்களை பிக்-அப் செய்துகொள்வார்கள். கேரளாவின் டூரிஸ்ட் ஸ்பாட்களில் அரசாங்க ஓட்டல் களைவிட, தனியார் ஓட்டல்களில் கட்டணம் குறைவு என்பது உபரித் தகவல். சென்னையிலிருந்து இருவர் வயநாடு சென்று யாத்ரி ரிசார்ட்டில் இரண்டு இரவு தங்கும் 3 நாள் டூருக்கு, 15 ஆயிரம் ரூபாய் வரை செலவு ஆகும். பட்ஜெட் ஓட்டல்கள் என்றால் செலவு 10 ஆயிரத்தில் அடங்கிவிடும்.

# மரத்தில் குடியேறலாம் வாங்க!

தமிழ்நாட்டில் நாமக்கல் மாவட்டத்தில் உள்ளது கொல்லிமலை. உயரம் சுமார் 1000 மீட்டர் முதல் 1300 மீட்டர் வரை. இங்கே கொல்லிப் பாவைக்கு ஒரு கோவில் உண்டு. இங்குள்ள ஆகாசகங்கை நீர்வீழ்ச்சி சுற்றுலாப் பயணிகளைக் கவரும் ஓர் முக்கிய இடம். இப்பகுதியை ஆண்ட கடை ஏழு வள்ளல்களுள் ஒருவரான வல்வில் ஓரி நினைவாக ஆடிமாதத்தில் ஓரி பண்டிகை கொண்டாடப்படுகிறது.

நாமக்கல்லிலிருந்து 55 கி.மீ. மலைப் பாதையில் சுமார் 25 கி.மீ. பயணிக்க வேண்டும். மலைப்பாதையில் சில கொண்டை ஊசி வளைவுகள் மிகக் குறுகலா னவை என்பதால் பெரிய பஸ்கள் போக முடியாது. கொல்லி மலை ஒரு சுற்றுலாத்தலமாக இன்னமும் பெரிய அளவில் பிரபலமாகவில்லை என்பதால், இங்கே இயற்கை அழகு பெரிய அளவில் பாதிக்கப்படவில்லை. டூரிஸ்ட்கள் தங்க வசதிகள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. சென்னையிலிருந்து கொல்லி மலைக்கு இருவர் இரண்டு நாட்கள் சுற்றுலா சென்றுவர நாலாயிரம் ரூபாய் வரை ஆகும்.



● **ச.ஆ.கேசவன், இனாம்மணியாச்சி**

***அறுசுவையை மிஞ்சிய ஏழாவது சுவை எது...?***

இனிப்பு, கசப்பு, புளிப்பு, துவர்ப்பு, உறைப்பு, உவர்ப்பு இப்படி அறுசுவையை அனுபவித்து விட்டு வருவது 'போதும் என்ற' ஏகாந்த 'அலுப்பு...' இந்த அலுப்பால் வரும் "ஆசை அறுமின் ஆசை அறுமின் அறுசுவையாயினும் ஆசை அறுமின்" ஞானம்... ஞானிகளின் வாக்கைக் கேட்கும் "செவிச் சுவையே" ஏழாவது சுவை... இதைத்தான் திருவள்ளுவரும்... "செவியின் சுவைஉணரா வாய்உணர்வின் மாக்கள் - அவியினும் வாழினும் என்" என்பார்!

● **என்.கோமதி, நெல்லை**

***பிள்ளையாருக்குக் கொழுக்கட்டை படைத்தால் எப்படி வாசம் பிடிப்பார்?***

விநாயகருக்கு பிடித்த வாசம் நீங்கள் கடைப்பிடிக்கும் உப'வாசம்'!



● **பி.வெங்கடலட்சுமி, கோவில்பட்டி**

***கண்ணுக்குள் 'பாப்பா' போனது எப்படி?***

பாப்பா 'Eyes Cream' சாப்பிடும் ஆசையில் போயிருக்கும்!

● **மஞ்சு, மும்பை**

***ஐ.பி.எல். மேட்ச், மெகா சீரியல் ஒப்பிடுக...?***

ஐ.பி.எல். மேட்ச் Cheer-Leader... மெகா சீரியல் Tear-Leader!

● **எம்.மிக்கேல்ராஜ், சாத்தூர்**

***கடவுளின் வீடு எங்குள்ளது?***

நேராப் போனா வரும். கண்டுபிடிக்க முடியலேன்னா, எந்தக் குழந்தையைக் கேட்டாலும் வழி சொல்லும்!

● **மீனா ரெங்கநாதன், மாம்பலம்**

***உங்களிடம் இருப்பது என்ன மாடல் கார்?***

என்னுடைய மாடல் 'ஐயங்கார்'. என் காரின் மாடல் 'ஐ-டென்-கார்'.

● **ஜி.ரெஜினா பானு, பழனி**

***வானுக்கு அழகு நிலவா? நட்சத்திரங்களா?***

பௌர்ணமியில் நிலவு... அமாவாசையில் நட்சத்திரங்கள்!

● **ஆர்.அஜிதா, கம்பம்**

***சகிப்புத்தன்மை எதுவரை இருக்கலாம்?***

சகிப்பவன்தான் சுகிப்பான். சுகி சிவம்! சகி சக்தி!

● **அ.ஷண்முகசுந்தரம், பெங்களூரு**

***Foot-World, Food-World என்பதை தமிழில் எழுதினால் வித்தியாசம் தெரியவில்லையே... உச்சரிப்பு வித்தியாசம் தெரிய ஒரு வழி சொல்லுங்களேன்...?***

பாத-உலகம், சாத-உலகம் என்று எழுதிவிட்டுப் போங்களேன்!

● **வி.ஜி.சத்தியநாராயணன், நங்கநல்லூர்**

***மனித வாழ்வில் மரணம் என்பது முற்றுப்புள்ளியா..?***

மரணம் Full Stop அல்ல... அடுத்த ஊருக்கு Bus Stop. இந்த வாழ்க்கை போதும், 'பஸ்' என்று ஹிந்தியில் நிறுத்திக் கொள்ளும் ஸ்டாப்!

● **வெ.ராம்குமார், வேலூர்**

***விளையாட்டுச் சமாச்சாரங்களில் நீங்கள் எப்படி ஹீரோவா? ஜீரோவா?***

தீப்பிடித்து எரிந்தாலும் டீ.வி.யில் ஐ.பி.எல். பார்க்கும் மன்னன் நீரோ!

• பி.பாரதி, ஹூப்ளி

**ஆயகலைகள் அறுபத்தி நான்கினையும் அறிந்தவர்கள் இருக்கிறார்களா...?**

இருப்பார்கள்... நமக்குத் தெரியவில்லை. காரணம் அறுபத்தி நான்கில் ஒன்று 'அடக்கம்'!

• லலிதா, கும்பகோணம்

**எது உண்மை? எது பொய்?**

உன் Myதான் உண்மை. மற்றபடி எல்லாமே இல்Lie.

• அ.ராஜா ரஹ்மான், பெரியபள்ளி

**உணவு எப்போது மருந்தாகிறது? எப்போது விஷமாகிறது?**

ஐயமிட்டு உண்டால் மருந்து. மற்றவர்கள் கொட்டிக் கொள்வதைப் பார்த்துவிடப் போகிறார்களே என்று, மறைந்து 'ஐயத்தோடு உண்டால்' விஷம்!

• வாசுதேவன், அயிரோலி

**ஆண்கள் கிரிக்கெட், பெண்கள் கிரிக்கெட் என்ன வித்தியாசம்?**

பெண்கள் ஆடும் போது, உற்சாகப்படுத்த 'சியர்-லீடர்களாக' ஆண்கள் ஆடினால், நீங்கள் கேட்டபடி வித்தியாசமாக இருக்கும்!

• எம்.அசோக்ராஜா, அரவக்குறிச்சிப்பட்டி

**முதுமைப் பருவம் இனிமையானதா?**

முதுமையில் ஏது பருவம்!

## கடவுளின் வீடு!



ஜி.எஸ்.எஸ்.

# பிரஜை இல்லா கண்டம்
# 46 நாடுகள் சொந்தம்

அன்டார்ட்டிக்கா ஒரு தேசம் அல்ல. கண்டம். தவிர அன்டார்ட்டிக் வளையப் பகுதியின் தெற்காக அமைந்துள்ள இது, ஐரோப்பாவை விடவும், ஆஸ்திரேலியாவை விடவும் பெரிதுதான்.

ஆனால், வேறொரு கோணத்தில் இது வாமனப் பரப்புதான். இங்கு நிரந்தரமாக வசிக்கும் மக்களின் எண்ணிக்கை எவ்வளவு தெரியுமா?

'ஒன்றே ஒன்று' என்று நீங்கள் சொன்னாலும்கூட அது அதிகம்! ஆம் 'பூஜ்யம்' என்பதுதான் பதில். அங்கு தாற்காலிகமாக உள்ளவர்களின் எண்ணிக்கைகூட வெறும் ஆயிரம்தான். இந்த ஆயிரம் பேர் கூட, அங்கு தங்கி ஆராய்ச்சி செய்பவர்கள்தாம்.

அன்டார்ட்டிகாவின் பரப்பில் 98 சதவிகிதம் ஐஸால் சூழப்பட்டுள்ளது. குறைந்தது ஒரு மைல் உயரத்துக்கான பனிக்கட்டி. உலகின் பனிக்கட்டியில் 90 சதவிகிதம் இங்குதான். இந்தப் பனிக்கட்டி அத்தனையும் உருகினால் கடல் மட்டம் சுமார் 200 அடி உயர்ந்து விடுமாம். (சுனாமி வருவது போல நடுக்கமேற்படுகிறதா?).

அன்டார்ட்டிகா ஒரு கண்டம் மட்டுமல்ல, பாலைவனமும் கூட! இது எல்லா கண்டங்களையும் விட உயரத்தில் உள்ளது.

கையளவு நிலம் கூட, இன்னாருக்கு சொந்தம் என்றாகிறது. இல்லாவிட்டால் குடுமிப்பிடி சண்டை நடக்கிறது. இதுதா உலக வரலாறு கண்ட உண்மை. ஆனா அன்டார்ட்டிகா யாருக்கு சொந்தம் என் கேள்விக்குரிய பதில் வியப்பானது.

அந்த வியப்பு பதிவானது 1959-ஆ ஆண்டில்தான். அப்போது சோவிய யூனியன், சிலி, ஆஸ்திரேலியா, அர்ஜெ டினா, பிரிட்டன் உட்பட பன்னிரண் நாடுகள் ஓர் உடன்படிக்கையில் கையெழு திட்டன. அதற்குப் பிறகு, வேறு ப



கள் நடந்து கொண்டிருக்கின்றன. அமெரிக்கா, அன்டார்ட்டிகாவில் தங்கி ஆராய்ச்சி செய்யும் தன் மக்களுக்கு விருது தருகிறது. ஆனால் இரண்டு மாத சீஸன்கள் அங்கு தங்கி ஆராய்ச்சி செய்ய வேண்டும்.

இப்போதைக்கு முக்கியத் தொழில் மீன்களைப் பிடிப்பதும் விற்பதும்தான். சுற்றுலாவிலும் கவனம் செலுத்துகிறது. பற்கள் தந்தியடிக்கப் பல மாடுகளின் தோல்களைக் கொண்ட ஷு, நாலைந்து கம்பளிச் சட்டைகள் ஆகியவற்றோடு வந்து செல்கிறார்கள். எனினும், சுற்றுலாப் பயணிகளால் சூழல் பாதிப்படைகிறது என்று கவலைப் படத் தொடங்கியிருக்கிறார்கள் சூழியல் வல்லுனர்கள்.



நாடுகளும் அதில் இணைய முடிவெடுத்தன. (இப்படி மொத்தம் 46 நாடுகள்).

இந்த உடன்படிக்கையின் சாரம், ''எந்தவித ராணுவச் செயல்பாடும் அன்டார்ட்டிகாவில் கூடாது. சுரங்கம் தோண்டும் பணிகளும் கூடாது. அறிவியல் ஆராய்ச்சிக்கு மட்டுமே இப்பகுதியைப் பயன்படுத்திக் கொள்ளலாம்'' என்பதாகும்.

இப்படிப் பல்வேறு நாடுகளைச் சேர்ந்த ஆயிரக்கணக்கான விஞ்ஞானிகள் இங்கு ஆராய்ச்சிகளை மேற்கொண்டு வருகிறார்கள். இந்தியாவும் தான். அங்குள்ள இந்திய விண்வெளி ஆராய்ச்சி மையத்தின் பெயர் 'தக்ஷிண் கங்கோத்ரி'.

குளிர்ப் பகுதியில் வாழும் விலங்குகள் பற்றிய ஆராய்ச்சியிலிருந்து, வைரஸ்கள் இப்படிப்பட்ட சூழலில் எப்படி இயங்குகின்றன என்பதுவரை பலவிதமான ஆராய்ச்சி

17

வாமனதேசங்கள்

இதற்காகச் சற்று வித்தியாசமான முறையில் 'அன்டார்ட்டிகா சுற்றுலா' என்ற பெயரில் ஆஸ்திரேலியாவும் நியூசிலாந்தும் விமான சர்வீஸ்களை நடத்தி வந்தன. இந்த விமானங்கள் அன்டார்ட்டிகாவில் இறங்காது. மேலே இருந்தபடியே (அதாவது பறந்தபடியே) அன்டார்ட்டிகாவின் அற்புதங்களைச் சுற்றுலாப் பயணிகள் கண்டு ரசிக்கலாம். ஆனால் 1979-ல் 'ஏர் நியூசிலாந்து' விமானம் ஒன்று எரெபஸ் என்ற



## அன்டார்ட்டிகா முழுவதும் ரஷ்யர்களால் கண்டுபிடிக்கப்பட்டதுதான்.



அன்டார்ட்டிக் குன்றில் மோதியதில் 257 விமானப் பயணிகளும் இறந்துவிட்டனர். அதன் பிறகு, அதுபோன்ற விமான சர்விஸ்கள் நிறுத்தப்பட்டன.

இதற்கென்று அரசு கிடையாது. எந்த அரசியல் சார்பும் கிடையாது. ஆனால் பல நாடுகள் இப்பகுதிக்குச் சொந்தம் கொண்டாடுகின்றன. 1959-லிருந்து எந்தப் புதிய நாடு உரிமை கொண்டாடினாலும் அது ஏற்றுக் கொள்ளப்படுவதில்லை.

'நாங்களாக அன்டார்ட்டிகாவைப் பிரித்துக் கொள்ள மாட்டோம். ஏனென்றால், உடன்படிக்கையில் கையெழுத்திட்டுவிட்டோம். மற்றபடி எப்போதாவது அன்டார்ட்டிகா பிரிக்கப்பட்டால், அதில் பங்கெடுத்துக்கொள்ள எங்களுக்கு ஆசைதான்'. இதை விதவிதமாக அறிவித்துள்ள நாடுகள் பிரேசில், பெரு, தென்னாப்பிரிக்கா, ஸ்பெயின், அமெரிக்கா ஆகியன. ரஷ்யா ரொம்ப நாசூக்காக 'ரஷ்யர்களால் கண்டுபிடிக்கப்பட்ட பகுதிகளைப் பெற எங்களுக்கு ஆர்வம் இருப்பதில் என்ன தவறு?' என்கிறது. இதில் ஒரு சூட்சுமம் என்னவென்றால், அன்டார்ட்டிகா முழுவதுமே ரஷ்யர்களால் கண்டுபிடிக்கப்பட்டதுதான். (1826-ல் இரு ரஷ்யர்கள்தான் இந்தப் பகுதியை முதலில் கண்டறிந்தார்கள். என்றாலும், அந்த நாம்



நூற்றாண்டின் முடிவு வரை இது ஆளில்லா அத்துவானமாகவே இருந்தது).

பிளாட்டினம், குரோமியம், தங்கம் போன்ற உலோகங்களும் அண்டார்ட்டிகாவில் தட்டுப்படுகின்றன. அந்த 'பாழாய்ப் போன உடன்படிக்கை'தான் பல நாடுகளைக் கட்டிப் போட்டு வைத்திருக்கிறது. 2048-ல் 'சுரங்கங்கள் வெட்டத் தடை' என்ற விதி மறு பரிசீலனை செய்யப்படும் என்கிறது உடன்படிக்கை. அப்போது இருக்கிறது பங்காளிச் சண்டை!

**(அடுத்த இதழில் - '90 சதவிகிதத்தை அழித்த இவான்' நாடு)**

வின்சன் மஸ்ஸிஃப்



மவுண்ட் எரெபஸ்



❋ அண்டார்ட்டிகா என்றால் 'வடக்குக்கு எதிராக' என்று பொருள். அதாவது தென் துருவம்.

❋ கடுங் குளிரிலும் வாழ முடிந்த விலங்குகளால்தான் வசிக்க முடியும். பென்குவின், ஸீல் போன்றவற்றை இங்கு காணலாம்.

❋ நாய்களால் இழுத்துச் செல்லப்படும் வண்டிகளுக்குத் தடை விதிக்கப்பட்டிருக்கிறது. நாய்கள் அண்டார்ட்டிக் பகுதிக்கு புதியவை என்பதால் இந்தத் தடை.

❋ ஆண்டுதோறும் 27 நாடுகளைச் சேர்ந்த பல்வேறு விஞ்ஞானிகள் இங்கு அறிவியல் சோதனைகளைச் செய்துவிட்டுச் செல்கிறார்கள்.

❋ வடக்கே உள்ள பெரிய பெரிய (ஆசிய, ஐரோப்பிய, வட ஆப்ரிக்க) நாடுகளையெல்லாம் பாலன்ஸ் செய்ய, தெற்குப் புறமாக அதற்கு இணையான நிலப்பரப்பு வேண்டாமா? அப்படி, அதற்காக உருவாக்கப்பட்டதுதான் அண்டார்ட்டிகா என்பவர்களும் உண்டு.

❋ அண்டார்ட்டிகா இரண்டாகப் பிரிக்கப்பட்டுள்ளது - மேற்கு, கிழக்கு. கிழக்கு அண்டார்ட்டிகா இன்னும் அதிகமான குளிர்ப் பிரதேசம்.

❋ பல மலைகளைக் கொண்டது. மிக உயரமான சிகரம் 4,892 மீட்டர் உயரத்தில் அமைந்துள்ளது. பெயர் வின்சன் மஸ்ஸிஃப்.

❋ எரிமலையும் உண்டு - மவுண்ட் எரெபஸ்.

❋ 1,700 லட்சம் ஆண்டுகளுக்கு அண்டார்ட்டிகா என்பது கோண்ட்வானா என்ற மாபெரும் கண்டத்தின் ஒரு பகுதியாக இருந்ததாம். காலப்போக்கில் அது மெல்ல மெல்ல உடைந்துவிட, இன்றைய அண்டார்ட்டிகா சுமார் 250 லட்சம் ஆண்டுகளுக்கு முன் உருவானது.

❋ உலகிலேயே மிகவும் குளிரான பகுதி. மைனஸ் 89.2 டிகிரியை எட்டியதும் உண்டு.

❋ ரஷ்ய விண்வெளி அமைப்பு இங்கு ஒரு மாதாகோயிலையும் அமைத்துள்ளது.



# தண்டவாளத்தில் ஒரு தங்கரதம்!

**கா**ர்பெட் விரித்த தரை; கலைநயத்து டன் உருவாக்கப்பட்ட கட்டில்; அதில் வண்ணமயமான சில்க் விரிப்பு; அட்டாச்டு பாத்ரூம்; பொழுதுபோக்க பிளாஸ்மா டீ.வி. விதம்விதமாக சினிமா மற்றும் இதர நிகழ்ச்சி களைக் காண டிவிடி சேனல்கள்; உபரியாக டீ.வி. சேனல்கள்; எழுதப் படிக்க சௌகரிய மான மேஜை, நாற்காலி, இருபத்து நாலு மணி நேரமும் மென்மையான இசை. உடற் பயிற்சி செய்ய ஜிம், அவசியமானால் நோய் தீர்க்க ஆயுர்வேத சிகிச்சை மையம்; நீராவிக் குளியல் வகையறா வேண்டுமென்றால் இருக்கிறது ஸ்பா.

இது எந்த நட்சத்திர ஓட்டல் அறை என்று கேட்கிறீர்களா? நட்சத்திர ஓட்டல் எதுவுமில்லை; இந்த வசதிகளுடன் அறை கள் இருப்பது ஒரு ரயிலில். பெயர்: தங்க ரதம்! இந்திய ரயில்வேயும், கர்நாடக அரசின் சுற்றுலாத்துறையும் இணைந்து உருவாக்கி யுள்ள இந்த நட்சத்திரச் சுற்றுலா ரயில், கடந்த இரண்டு ஆண்டுகளாகத் தென்னிந்தி யாவில் வலம்வந்துகொண்டிருக்கிறது.

ஒரு பெட்டியில் நான்கு சொகுசு அறை கள். இது போல 11 பெட்டிகள். மற்ற பெட்டிகளில் உணவகங்கள், கிச்சன், ஜிம் என்று மொத்தம் 18 பெட்டிகள் தங்க ரதத்தில் இருக்கின்றன. வடக்கே ஏற்கனவே ராஜஸ்தான் மாநிலத்தை டூரிஸ்ட்கள் சுற்றிப் பார்க்க டெல்லியிலிருந்து புறப்படும் 'பேலஸ் ஆன் வீல்ஸ்' என்ற சொகுசு ரயில் இயக்கப்பட்டு வருகிறது. தென்னிந்தி யாவின் முதல் டூரிஸ்ட் சொகுசு ரயில் 'கோல்டன் சாரியட்' என பெயரிடப்பட்டுள்ள தங்க ரதம்தான். இதன் ஒவ்வொரு பெட்டிக்

கும் சாளுக்கியா, ஹொய்சாளா, பாமினி, கடம்பா, ராஷ்டிர கூடா, விஜயநகரா என்று வரலாற்றில் இடம்பெற்ற சாம்ராஜ்ஜியங்களின் பெயர்கள் சூட்டப்பட்டிருக்கின்றன. நாற்பது கோடி ரூபாய் செலவில் உருவாக்கப்பட்டுள்ளது இந்தச் சுற்றுலா ரயில்.

இந்த ரயில் இரண்டு வழித்தடங்களில் பயணிக்கிறது. 'பிரைடு ஆஃப் சௌத்' என்று ஏழு நாள் டூரில் பெங்களூரிலிருந்து புறப்பட்டு, மைசூர், கபினி, பேலூர், ஹளேபீடு, சிரவணபெல்குளா, ஹம்பி, பாதாமி என்று கர்நாடகாவில் சுற்றிவிட்டு, கோவாவுக்குப் போய், அங்கிருந்து பெங்களூரு திரும்பலாம். இன்னொரு சுற்றுலாவுக்குப் பெயர் 'சதர்ன் ஸ்பௌண்டர்'. இதுவும் ஏழு நாள் டூர் தான். இதில் பெங்களூருவில் புறப்பட்டால் தெற்காகப் பயணித்து சென்னை, மகாபலிபுரம், புதுச்சேரி, தஞ்சாவூர், மதுரை, திருவனந்தபுரம், கோவளம், ஆலப்புழா, கொச்சி பார்த்துவிட்டு மீண்டும் பெங்களூரு.

"'பேலஸ் ஆன் வீல்ஸ்' ரயிலுக்கு இந்தியாவுக்கு வருகிற அயல்நாட்டு டூரிஸ்ட்கள் மற்றும் அயல்நாடுகளில் வசிக்கும் இந்தியர்கள் மத்தியில் கிடைத்த அமோக வரவேற்புதான், எங்களை இப்படி ஒரு சொகுசு ரயில் சுற்றுலாவைத் திட்டமிடத் தூண்டியது. இந்த ரயிலில் சுற்றுலாப் பயணிகளுக்கு பாரம்பரிய கர்நாடக மற்றும் இந்திய உணவு வகைகளையும் அறிமுகப்படுத்துகிறோம்; இந்த தங்கரத ரயிலில், எங்கள் ராஜோபசாரத்தில் நீங்கள் ஒருமுறை பயணம் செய்தால், அது உங்கள் ஆயுசுக்கும் மறக்காது" என்கிறார் தங்கரத ரயிலின் இயக்குனரான ஸ்ரீனிவாஸ்.

அதெல்லாம் சரி! கட்டணம் எவ்வளவு என்கிறீர்களா? ஹி..ஹி.. இந்தியப் பிரஜைகளுக்கு என்றால், ஏழு நாள் டூருக்கு தனியறை வசதியுடன் ஒருவருக்கு ஒரு லட்சத்து இருபதாயிரம் ரூபாய்தான்(!); அயல்நாட்டு டூரிஸ்ட் எனில், ஒரு லட்சத்து எண்பத்தைந்தாயிரம்!



**அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி 2010**



**முதல் பரிசு ரூ.10,000/-**

**இரண்டாம் பரிசு-ரூ.7,500/-**

**மூன்றாம் பரிசு-ரூ.5,000/-**

கதைகள் வந்து சேரக் கடைசித் தேதி: ஜூன் 15.
மேலும் விவரங்களுக்கும், விதிமுறைகளுக்கும் சென்றவார இதழைப் பார்க்கவும் அல்லது அடுத்த இதழில் காணவும்.

—ஆசிரியர்




# ஆட்டமா



* சச்சின்



* கும்ப்ளே



* லட்சுமண்

கிரிக்கெட்டில் உள்ள அத்தனை பேரும் யோக்கியர்கள் என்று சொல்லிவிடமுடியாது. சமீபத்தில்கூட கவுண்டி மேட்சில், மேட்ச் ஃபிக்ஸிங் தொடர்பாக இரு வீரர்கள் கேள்விக்கு உட்படுத்தப்பட்டிருக்கிறார்கள். பாகிஸ்தானில் இப் பிரச்னை இன்றும் தொடர்கிறது. ஆனால், இங்கு மனோஜ் பிரபாகர், அசாருதீனுக்குப் பிறகு யார்மீதும் எந்தவொரு சந்தேகப் பார்வையும் விழவில்லை. காரணம், இங்குள்ள சூழல். மட்டுமின்றி மேட்ச் ஃபிக்ஸிங்கில் ஈடுபட்டவர்கள், பிறகு பட்ட அவஸ்தைகளை எல்லோரும் அறிந்தே இருக்கிறார்கள்

மேட்ச் ஃபிக்ஸிங் செய்துதான் நன்றாகச் சம்பாதிக்க முடியும் என்கிற அவலம் இன்றைக்குக் கிடையாது. 29 வயதுக்குள் தோனி எட்டுகோடி வருமான வரி கட்டுகிறார் என்றால், அவருடைய வருமானம் அதிகம்தானே! மேலும், இந்திய அணி தொடர்ந்து பல வெற்றிகள் பெற்று வருவதால், வீரர்களுக்கு அடிக்கடி பரிசுத்தொகையும், திரைப்படத்தினரை விடவும் அதிக விளம்பரங்களும் கிடைக்கின்றன. இத்தனையும் தாண்டி, ஒரு பெரிய தொகை வெளியிலிருந்து கிடைத்து, அதற்காக வீரர்கள் தங்கள் திறமையை விட்டுக்கொடுப்பார்கள் என்று நம்ப முடியவில்லை. விட்டுக்கொடுக்கத் திறமை என்ன பேனா பென்சிலா?

மற்ற எல்லாத் துறைகளை விடவும் கிரிக்கெட்டுக்கு ஒரு விசேஷம் உண்டு. புகழ் வெளிச்சம். சினிமா நட்சத்திரங்களை விடவும் கிரிக்கெட் வீரர்கள்தான் அதிகப் பேரும் புகழும் பெறுகிறார்கள். இவர்களுடைய வெற்றிகளுக்கு மட்டும்தான் ஜனாதிபதியும் பிரதமரும் வாழ்த்து தெரிவிக்கிறார்கள். ஒரு ராஜ போக வாழ்க்கை கிரிக்கெட் வீரர்களுக்கு மட்டுமே சாத்தியமாகிறது. ஆனால், கிரிக்கெட்டை பிஸினஸாக எண்ணுபவருக்கு இந்த விளையாட்டு லாயக்கில்லை. அசாத்திய

# ...தாட்டமா?

ச.ந.கண்ணன்

திறமை, தீவிரப் பயிற்சி, தேசப்பற்று, குழு மனப்பான்மை என்று பல வித்தைகளும், அர்ப்பணிப்பு உணர்வும் கொண்டிருப்பவருக்கே இந்த விளையாட்டு சாத்தியமாகிறது.

இந்தியாவில் சச்சின், திராவிட், கும்ப்ளே, கங்குலி, லஷ்மண் என்று இதற்குச் சில நல்ல உதாரணங்கள் உண்டு. இவர்கள் ஒருபோதும் மேட்ச் ஃபிக்ஸிங் தொடர்பான எந்தச் சர்ச்சைகளிலும் ஈடுபட்டு பேரைக் கெடுத்துக்கொண்டது கிடையாது. இதனால், கிரிக்கெட்டில் ஈடுபடும் இளம் தலைமுறையினர் இவர்கள் அடைந்த உயரத்தை தங்களுடைய பெஞ்ச் மார்க்காக வைத்துக்கொள்கிறார்கள்.

மேட்ச் ஃபிக்ஸிங்கில் ஈடுபட்டால் ஒரு மேட்சுக்கு காசு வரும். பிறகு? அணியில் இடமில்லாமல் போனால் ஏது நிரந்தரமான பணம், புகழ்? கிரிக்கெட்டுக்கு வெளியேதான் பெட்டிங்கில் ஆரம்பித்து ஆயிரம் பணப்பரிமாற்றங்கள் நடக்கின்றன. திருட்டு டிவிடி அடித்து ஒருவர் பிழைப்பது போலத்தான் அதுவும். ஒரு சினிமா எப்படி இருக்கவேண்டும் என்பதை திருட்டு டிவிடி விற்பவர் தீர்மானிக்க முடியாது. ஆனால் அவருடைய பிழைப்பு, சினிமாவை நம்பித்தான். அதுபோல்தான் கிரிக்கெட்டுக்கு வெளியே நடக்கும் சூதாட்டமும் இதரப் பித்தலாட்டங்களும். அதற்கும் வீரர்களின் பங்களிப்புக்கும் நிச்சயம் சம்பந்தம் இருக்காது.

கிரிக்கெட் பிட்சை ஒரு கூட்டம் வெட்டி எடுத்த போதும், மைதானத்துக்குள் குண்டு வைக்கப்பட்ட போதும், ஏன் கிரிக்கெட் வீரர்கள்மீது ராக்கெட் லாஞ் ர்கள் வீசப்பட்ட பிறகும்கூட, கிரிக்கெட் ஜீவித்துக் கொண்டுதான் இருக்கிறது. மேட்ச் பிக்ஸிங், சூதாட் டம், மோடி, ஐபிஎல் என ஒவ்வொரு காலகட்டத் துக்கும் அதற்கென்று ஒரு பிரச்னை தேடி வரும். ஒவ்வொரு பிரச்னையின்போதும் கிரிக்கெட் மேலும் வலுப்பெறுவதுதான் அதன் வாடிக்கையாக இருக்கிறது.

* கங்குலி

* டிராவிட்

* லலித்மோடி



* 'ரெட்டச்சுழி' படத்தில்...

# குடிசைக்குள் தாஜ்மகால்!

"நிகழ்காலத்தில் முழுமையாக இருங்கள். அது நம்மையறியாமல் கடந்து போகிறது என்று சொன்ன ஓஷோவின் ஜென் தத்துவங்களை, பயணத்தின்போது என்னைக் கடந்து செல்லும் ஊர்கள், பொருட்கள், பெரிய நிலப்பரப்புகள் வாயிலாக உணர்ந்திருக்கிறேன். வாழ்க்கையில் எதுவும் நிலையில்லை என்பதை ஒவ்வொரு பயணமும் நமக்கு உணர்த்திக் கொண்டேதான் இருக்கிறது" என்று தத்துவார்த்த பிடிகையோடு தொடங்குகிறார் ஒளிப்பதிவாளர் செழியன்.



* செழியன்

பாலசந்தரையும் பாரதிராஜாவையும் ஒரு சேர தன் கேமிராவுக்குள் 'ரெட்டச்சுழி'யில் அடைத்த இந்த ஒளிப்பதிவாளரிடம், பயணம் குறித்துக் கேட்டால், ஆய்வுக் கட்டுரையாக அடுக்குகிறார்:

"ஒரு ஒளிப்பதிவாளராக, இரவு நேரப் பயணங்கள் பிடிக்கும். விதவிதமான லைட்டிங், வர்ணங்கள் எனப் பல விஷயங்களை எனக்கு இரவுப் பயணங்களே கற்றுத் தந்திருக்கின்றன. சமீபத்தில் ஆக்ரா சென்றிருந்தேன். காரில் ஆக்ராவின் வீதிகளில் சுற்றி வந்தபோது, ஒரு குடிசை வழியாக பிரம்மாண்டமான தாஜ்மஹால் என் கண்களுக்குத் தெரிந்தது. உலக அதிசயம், ஏழையின் சாதாரணக் குடிசை வழியில்! பயணத்தின் போது, இதுபோன்ற வித்தியாசமான காட்சிகளும் ஒளிப்பதிவாளனுக்குக் கிடைக்கும்.

'லேண்ட்ஸ்கேப் இன் தி மிஸ்ட்!' - த்யோ ஏஞ்சலோ பவுலோஸ் இயக்கிய இப்படத்தில், இரண்டு குழந்தைகள் தங்கள் தந்தையைக் கண்டுபிடிக்கப் பயணங்கள் மேற்கொள்வார்கள். வழியில் அவர்கள் சந்திக்கும் மனிதர்கள், பார்க்கும் இடங்கள், குழந்தைகளின் நுண்ணிய உணர்வுகள் எனப்

பலவற்றை யதார்த்தம் மாறாமல் சொல்லியிருப்பார் இயக்குநர். கடைசி வரைக்கும் தந்தையைக் கண்டறிய முடியாது. பயணம் எல்லாவற்றையும் கற்றுத் தரும். ஆனால், எல்லாப் பயணத் தேடல்களும் லட்சியத்தை அடைவதில்லை என்பதை உணர்த்தும் படம் இது.



**சைக்கிள் சுகமானது. அந்தப் பயணத்தில் உழைப்பு இருப்பதால் அது பரம சுகம்!**

* லேண்ட்ஸ்கேப் இன் தி மிஸ்ட்!

**ப**யணம் செய்ய எனக்குப் பிடித்த வாகனம் சைக்கிள்தான். சிவகங்கையில் சைக்கிளில் சுற்றிய நாட்கள் மறக்க முடியாதவை. சைக்கிளைச் செலுத்துவதில் நமது உழைப்பும் இருப்பதால், அனுபவித்துப் பயணிக்க முடியும். 'ரெட்டச்சுழி'யில் சிறுவர்கள் சைக்கிள் ஓட்டும் காட்சிகளை ஒளிப்பதிவு செய்தபோது எனது சிறுவயதுகளில் பயணித்தேன்.

சமீபத்தில் ஜெர்மனியில் Bielefeld நகரத்திலிருந்து பாரீஸ் நகரத்துக்கு ரயிலில் சென்றேன். பனி படர்ந்த மலைகளுக்கு நடுவில் ரயிலில் சென்றது ரம்மியமாக இருந்தது. புலம் பெயர்ந்த ஈழத் தமிழர்களை இந்த நாடுகளில் சந்தித்துப் பேசியது மறக்க முடியாத பயண அனுபவம்.

**இ**ன்று குடும்பத்தோடு பயணம் செய்யக் கார் இருக்கிறது. ஆனால், சில ஆண்டுகளுக்கு முன்பு எனது மகன், மனைவியுடன் ஸ்கூட்டரில் முட்டுக்காடு தாண்டி உள்ளே கடற்கரைக்குச் செல்வேன். நேரம் போவது தெரியாமல் மகனுடன் கடற்கரை மணலில் நானும் குழந்தைபோல் விளையாடி மகிழ்வேன். நமது குழந்தைகளோடு பயணம் செய்வது அவர்களைச் சரியாகப் புரிந்து கொள்வதற்கு உதவும்.

சென்னைக்கு வந்து P.C.ஸ்ரீராம் சாரிடம் உதவியாளராக இருந்த காலம். திருமணம், இன்னும் சில நல்ல விஷயங்கள், உறவினர்கள் மறைவு எனப் பல்வேறு காரணங்களுக்காக எனது சொந்த ஊரான சிவகங்கைக்கு பலமுறை சென்று வருவேன். சென்னையிலிருந்து சிவகங்கைக்கு பயணம் செய்த, செய்து கொண்டிருக்கும் தேசிய நெடுஞ்சாலை, எனது வாழ்வியல் உணர்வுகளோடு சம்பந்தப்பட்டது. உலகம் முழுவதும் நான் பயணம் செய்தாலும், சென்னை to சிவகங்கைக்கு பயணம் செய்வது மட்டுமே கூடு தேடிப் பறவை செல்வதைப் போன்ற உணர்வை எனக்குத் தருகிறது. வேறெந்தப் பயணமும் இதற்கு ஈடாகாது'' என்று பயண அனுபவத்தை வாழ்வின் ஆவணமாக மாற்றுகிறார் செழியன்.

**- ராகவ்குமார்**




# வெயில் புராணம்

திறந்த வானத்தின் கீழ் இன்றைக்கும் வெயில்...
கடவுள் கருணையிருந்தால் என் அலுவல்
தொலைவுகள் இன்று குறைவாய் அமையலாம்.

எல்லோரும் வெறுக்கும் வெயில் நேற்று
கடைத்தெருவில் அரிந்த தர்பூசணித் துண்டங்களருகே
முகம் வீங்கி நின்றிருந்ததைப் பார்த்தேன். கொஞ்சம்
பாவமாய்த்தானிருந்தது.

வெளியூர் கிளம்புகிறேன். ரயிலைத் தொடர்ந்து
வந்துவிடுமோ என் ஊர் வெயில்?

பின்னிரவில் ஊர் திரும்புகிறேன். வறள்பனி மூடிய
தார்ச்சாலையோரம் ஒதுங்கிக் கிடக்கிறது வதங்கிச்
சோர்ந்த பகல். தொடுவான் இடுக்கில்
குற்றவுணர்வேதுமற்று, விடியலுக்குக் காத்திருக்கிறது
வீரியம் அறாத வெயில்.

ஒரு உச்சிப் பொழுதில் வெயில் திசை தேடி நான்
கிழக்கேயும் என் நிழல் மேற்கேயும் போனோம்.ஒரு
கானல் தடம் சொன்ன வழியில் சென்று எப்போதோ
நான் கைவிட்ட என் கடவுளைக்
கண்டேன்.யுகமாகியும் என் நிழலோ இன்னும்
திரும்பவில்லை.

# கோடைக்கால கொண்டாட்டம்

## ஆறு வார அதிரடி போட்டி!

கல்கி வழங்கும் கோடைக்கால கொண்டாட்டம், ஆறு வாரம் அதிரடியான போட்டிகளோடும், அசத்தலான தங்கக் காசு பரிசுகளோடும் வருகிறது வாசகர்களே... அந்தந்த வாரம் ஸ்பெஷலை அடிப்படையாக வைத்தே போட்டிகள் இருக்கும்.

இந்த வாரம் கோடைக்காலக் கொண்டாட்டத்தில் 'சுற்றுலா ஸ்பெஷல்' என்பதால் சுற்றுலாவை அடிப்படையாகக் கொண்ட **கோடைக்கால போட்டி-2** இதோ...

***விதிமுறைகள்***

வாசகர்களே! நீங்கள் செய்ய வேண்டியதெல்லாம் இவைதான்.

● கல்கி வழங்கும் கோடைக்கால கொண்டாட்டம் ஆறு வாரப் போட்டி இந்த இதழோடு சேர்த்து ஆறு வாரங்கள் வெளியாகும். (கடந்த வார இதழில் போட்டி - 1) ● ஒவ்வொரு வாரமும் வெளியாகும் போட்டிக்கான விடைகளை நிரப்பி, போட்டிப் பக்கங்களைக் கத்தரித்து பத்திரப்படுத்தவும். (81 - 82 பக்கம் முழுவதையும்). ● சரியான விடை எழுதிய வாசகர்களி லிருந்து குலுக்கல் முறையில் தேர்வாகும் ஆறு அதிர்ஷ்டசாலிகளுக்கு தலா கால் சவரன் தங்கக் காசு பரிசு. ● ஆறாவது வாரம் ஸ்பெஷல் போட்டியும் உண்டு. ● சரியான விடை எழுதி ஸ்பெஷல் போட்டியின் அடிப்படையில் தேர்வாகும் ஓர் அதிர்ஷ்டசாலிக்கு ஒரு சவரன் தங்கக் காசு பரிசு. ● ஆறுவார போட்டிப் பக்கங்களை ஒன்றாக இணைத்து அனுப்ப வேண்டும். ● ஆசிரியர் தீர்ப்பே இறுதி. ● ஆறு வாரப் போட்டிப் பக்கங்கள் வந்து சேரக் கடைசித் தேதி:

**10.06.2010**



**கோடையின் கடுமை தணிய இதோ சில யோசனைகள். குறிப்புகள் உணர்த்தும் இடத்தின் பெயரைக் கட்டங்களில் நிரப்புங்கள்.**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1 | | | | | |
| 2 | | | | | |
| 3 | | | | | |
| 4 | | | | | |
| 5 | | | | | |
| 6 | | | | | |
| 7 | | | | | |
| 8 | | | | | |

உருவாக்கம் : ஜி.எஸ்.எஸ்

1. இங்கே உள்ள பிருந்தாவன் தோட்டத்துக்குச் சென்று வரலாமே.
2. ஹொய்சள மன்னர்களின் எண்ணத்தில் உருவான அற்புத சிற்பச் சிறப்பு கொண்ட இடம். இங்குள்ள ஆலயத்தை நினைத்தாலே வெம்மை குறையுமே!
3. இங்கு சென்று ஆப்பிள் சாப்பிட்டபடி படகு வீட்டில் பயணம் செய்ய முடிந்தால் எவ்வளவு சிறப்பு!
4. ஊட்டியின் அருகே உள்ள இந்த மலைவாசஸ்தலத்துக்குச் செல்லலாமே!
5. இங்குள்ள விதான் சௌதா, லால் பாக் ஆகியவற்றை எண்ணினாலே குளுமை தோன்றுமே!
6. பாலைவன மாநிலத் தலைநகர்தான். என்றாலும் 'காற்று மாளிகை' உள்ளதால் வெப்பம் குறையாதா என்ன?
7. இந்த நகரிலுள்ள தேசப் பிதாவை வேண்டிக் கொள்ளலாமா 'கோடையின்' கடுமை குறைய வேண்டுமென்று?
8. சென்னையின் இப்பகுதியில் உள்ள கபாலீஸ்வரரிடம் உலக வெப்பமயமாதலைத் தணிக்கவும் சேர்த்துப் பிரார்த்தனை செய்வோம்.

*ஆறு வாரங்களுக்கு உரிய போட்டிப் பக்கங்கள் வந்து சேர வேண்டிய முகவரி:*

**கோடைக்காலப் போட்டி, கல்கி**
47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

**கோடைக்காலப் போட்டி - 2**

பெயர் : ..............................

முகவரி : ..............................

..............................

..............................

தொலைபேசி: ..............................

அகில இந்திய மருத்துவக் கழகத் தலைவரான கேத்தன் தேசாயிடமிருந்து கோடிக்கணக்கில் ரொக்கமும் கிலோ கணக்கில் தங்கமும் கைப்பற்றப்பட்டிருக்கின்றன. இவர், 1996-2001 வரையிலும் பின்னரும் 2009-லிருந்தும் இந்த அமைப்பின் தலைவராக இருந்து வருகிறார். ஒரு மருத்துவக் கல்லூரி துவங்க ஐம்பது கோடி 'வெட்ட' வேண்டுமாம். தவிர, நாடெங்கிலும் உள்ள இருநூறுக்கும் மேற்பட்ட தனியார் மருத்துவக் கல்லூரிகளில் வருடம் ஒன்றுக்கு ஐந்து சீட்டுகள் இவருக்கு இலவசம் என்பது எழுதப்படாத ஒப்பந்தம். எனவே, சூப்பர் வசூல்தான். மத்திய சுகாதாரத் துறையின் நிர்வாகக் கட்டுப்பாட்டின் கீழ்வரும் இந்த அமைப்பில், அன்புமணி ராமதாஸ் அமைச்சராக இருந்தபோது தலைவராக இருந்தவர் டாக்டர் கேசவன் குட்டி. ஆனால், யார் தலைவராக இருந்தாலும் அங்கு தரகு வேலை பார்த்தவர் சி.பி.சிங். இவரும் இப்போது கைது செய்யப்பட்டிருக்கிறார். பழைய 'கதை'களையும் எடுத்துப் பார்க்க வேண்டுமென்ற கோரிக்கை வலுத்துவருகிறது. இந்த விவகாரம் 'பா.ம.க. டாக்டர்'களின் தூக்கத்தைக் கெடுத்து விட்டதாம். மேலும் ஓர் அதிர்ச்சியாக தி.மு.க. உறவுக்குக் கைகொடுக்க மறுத்துவிட்டதாகச் சொல்லப்படுகிறது.

## காதில் விழுந்தவை

டோமே'' என்று கலங்குகிறார்கள் அமைச்சர்கள். தேர்தல் சமயத்தில் எதிரான தீர்ப்பு வந்தால், சீட்டும் கிடைக்காது, எதிர்காலமும் அவுட்டாகிவிடும் என்பதே அவர்கள் கவலை.



# அழகிரி ராஜினாமா?

**2001-2006**ல் ஜெயலலிதா ஆட்சியில் இருந்தபோது, துரைமுருகன், நேரு, எம்.ஆர்.கே. பன்னீர் செல்வம், வீரபாண்டி ஆறுமுகம் மற்றும் கோ.சி.மணி ஆகியோர் மீது வருமானத்துக்கு அதிகமாகச் சொத்து சேர்த்ததாக போடப்பட்ட வழக்கை, தற்சமயம் உச்சநீதிமன்றம் விசாரணைக்கு ஏற்றுக்கொண்டு அமைச்சர்களுக்கும் தமிழக அரசுக்கும் நோட்டீஸ் கொடுத்து விட்டது. ''சட்டமன்றத் தேர்தல் நெருங்கி வரும் வேளையில், உச்சநீதிமன்ற விசாரணையில் மாட்டிக் கொண்

மே முதல் வாரம் முதல்வரின் தில்லி விஸிட்டுக்குப் பின், அழகிரி குறித்த தீர்மானமான சில முடிவுகள் எடுக்கப்பட்டு விடும் என்று சொல்கிறார்கள். தில்லி அமைச்சர் பொறுப்பு, மற்றொரு குடும்ப அங்கத்தினரான கனிமொழிக்கு போகும் நிலையில், அழகிரி கட்சியின் செயல் தலைவராக நியமிக்கப்படுவாராம். எதிர்காலத் திட்டங்களுடன் மாலத் தீவுகளில் விடுமுறையை கழித்துத் திரும்பி வரும் அழகிரி அமைச்சர் பொறுப்பை ராஜினாமா செய்யும் கடிதத்தை ஏற்கெனவே முதல்வரிடம் கொடுத்து விட்டாராம்.

**- சஞ்சயன்**

# அன்புக்கு வசப்படும் அம்பிகை

"இவ்வளவு சித்திகளும் கைவரப் பெற்றவர்கள் தேவர்கள். ஆனால், இத்தனையும் கைவரப் பெறுவது ஒரு பெரிய விஷயமா?'' என்று கேட்கிறார் ஆதிசங்கரர். அம்பாளை வணங்கித்தான் இந்த சித்திக் களைப் பெற வேண்டும் என்பது இல்லை. பிந்துஸ்தானத்துக்கு வெளியே உள்ள ஆவரணங்களின் மதில் மேல் உட்கார்ந்திருக் கிறார்களே, அந்தந்த சித்துக்களுக்குரிய தேவதைகள், அவர்களை வணங்கினாலே, அஷ்டமாசித்திகளைக் கொடுத்து விடுவார்கள்! அது ஒரு பெரிய விஷயமே இல்லை.

### பக்தியே வழி

ஆனால், உள்ளார்ந்த பக்தி இருந்தால் மட்டும்தான், அம்பாளுடைய அந்தப்புரத்துக் குப் போக முடியும். அந்தப்புரம் என்பது பிந்து ஸ்தானமாக இருக்கக்கூடிய பிரதேசம். அங்கே சிவகாமேசுவரரோடு தர்மபத்தினியாய் காமேசுவரி இருக்கிறாள். அங்கு பிரவேசிக்க வேண்டுமானால், 'அஷ்டமாசித்துக்களெல் லாம் வேண்டாம்; ஆத்மார்த்தமான அன்பு இருந்தால் போதும்...' என்பார் ஆதிசங்கரர்.

ஆக, அஷ்டமாசித்துக்கள் புடைசூழ, நடுவிலே சிவ காமேசுவரரோடு சிவசக்தி ஸ்வரூபமாக அம்பாள் இருக்கக்கூடிய இடம்தான் பிந்து. அந்த பிந்துவில் வாசம் செய்பவள் **பைந்தவாஸனா.**

### தத்துவங்களின் தலைவி

***தத்வாதிகா, தத்வமயீ*** அடுத்து நாம் பார்க்கும் இரண்டு திருநாமங்கள். தத்துவங் களுக்கெல்லாம் அப்பாற்பட்டு இருக்கக் கூடியவள்; தத்துவங்களாகவேயும் இருக்கக் கூடியவள். **தத்வமயீ** - தத்துவங்களுக்குத் தலைவி. இதற்குப் பின்வருவது **தத்வ மர்த்தஸ்வரூபிணீ** - என்கிற திருநாமம் - தத்துவங்களின் ஸ்வரூபமாக, அவற்றுக்கு ஆதாரம் தருபவளாக இருக்கக்கூடியவள் என்று பொருள்.

**ஸாமகானப்ரியா** - ஸாம கானத்தினால் ப்ரீதி அடையக்கூடியவள். **ஸோம்யா** - ஸோம்யா என்பதற்கு அழகானவள் என்று ஒரு பொருள் உண்டு. ஸோம யாகத்தினால் ப்ரீதி அடையக் கூடியவள் என்றும் ஒரு பொருள். **ஸோம்யா** என்று நுனி நாக்கி லிருந்து உச்சரித்தால், ஸோம யாகத்தினால் ப்ரீதி அடைகிறவள் என்று பொருள். கொஞ் சம் உள்ளே இருந்து உச்சரித்தால் அழகான வள் என்று பொருள். இரண்டுமே அம்பாளுக் குப் பொருந்தக் கூடியவைதான்.

**சதாசிவ குடும்பினீ** - சதாசிவ பர்யங்க நிலையாவாக, சதாசிவ தர்மபத்னியாக இருக்கக்கூடியவள் என்பதை ஏற்கெனவே பார்த்தோம். சதாசிவ குடும்பினி என்றால், அனுக்கிரஹம் செய்யக்கூடிய சதாசிவக் கடவுளின் தர்மபத்னியாக மட்டும் இல்லா மல்,அந்த அனுக்கிரஹ தேவதை, மற்ற தேவர்கள், படைப்போர், காப்போர் என எல்லோரும் அடங்கிய பெரிய

28

ஸ்ரீ லலிதா

நான்காம் பாகம்

சுதா சேஷய்யன்

குடும்பத்தைத் தாங்கி நிற்கக்கூடியவள் என்று பொருள்.

**ஸவ்ய - அபஸவ்யமார்கஸ்தா** - இதன் பொருள் என்ன என்பதை இறுதியில் சிந்திப் போம். ஒரு விஷயத்தை மட்டும் இப்போது புரிந்துகொள்வோம் - ஸவ்யமார்கம் என்று ஒன்று உண்டு; அபஸவ்ய மார்கம் என்பது மற்றொன்று. ஸவ்யம் என்றால் இடது என்று பொருள் வரும்; சில நேரங்களில் அதுவே 'வலது' என்ற அர்த்தத்திலும் பயன்படும் என்பதைப் பார்த்தோம். இந்த இடத்தில் 'வலது' என்று பொருள் எடுத்துக் கொண்டால், ஸவ்ய மார்கம் ஒன்று, அபஸவ்ய மார்கம் என்பது வாம மார்கம். அம்பாள் உபாஸனையில் ஸவ்ய மார்கம், வாம மார்கம் என இரண்டு உண்டு. இந்த இரண்டு மார்கங்களுக்கும் தலைவியாக இருக்கக்கூடியவள் அம்பிகை.

**ஸர்வாபத்விநிவாரிணி** - எல்லா விதமான ஆபத்துகளிலிருந்தும் நிவாரணம் தரக்கூடிய வள்.

**ஸ்வஸ்தா** - சஞ்சலமே இல்லாதவள்.

**ஸ்வபாவமதுரா** - அம்பாள் தேன் போன்ற, மதுரமான, இனிய ஸ்வபாவத்தை உடையவள்.

**தீரா** - பண்டிதையாக, எல்லாம் தெரிந்த வளாக இருக்கக்கூடியவள். ஸர்வ அறிவும் படைத்தவள்.

**தீர ஸமர்ச்சிதா** - தீரஸர்கள் - அதாவது பண்டிதர்களால் அர்ச்சிக்கப்படக்கூடியவள். பண்டிதையாக அவளே இருக்கிறாள். பண்டிதர்களால் அர்ச்சிக்கவும்படுகிறாள்.

## அருட்புனல்

**சைதன்யகுஸுமப்ரியா** - சைதன்ய மலரால் ப்ரீதி அடையக்கூடியவள்.

சைதன்ய மலர் என்றால் என்ன அர்த்தம்..? 'சித்' என்று சொல்கிறோமே சிதானந்தம்... அந்தத் தன்மையைத் தரக் கூடிய இயல்புக்கு சைதன்யம் என்று பெயர் அந்த சைதன்யத்தைத் தரக்கூடியவள். சைதன்யமாகிற மலர்ச்செண்டினால் ப்ரீதி அடைகிறவள்.

ஆசார்யர் ஆதிசங்கரர் பாடுகிறபோது அம்பாளிடம் சைதன்யமாகிற பூச்செண்டு இருப்பதாக வர்ணிக்கிறார். சைதன்ய பூச்செண்டின் மகரந்தத்தை அப்படியே நம் மீது தெளிக்கக்கூடியவள்:

**சைதன்ய ஸ்தவக மகரந்த ஸ்ருதி ஜரி**

ஸ்ருதி ஜரி என்றால் நீர்ப்புனல் போல் வாரி அடிப்பது என்று அர்த்தம். மலர்ச் செண்டின் மகரந்தத்தை இப்படி ஏன் அம்பாள் நம் மீது வாரிப் பொழிகிறாள்...? பூச்செண்டை ஓரிடத்தில் வைத்திருந்தால், நாம் அதைப் போய் எடுப்போமா என்பது தெரியாது. ஆனால் நீர்ப்புனல் போல் அடித் தால் அது போவோர் வருவோர் மீதெல்லாம் பொழியும்!

சாலையில் ஒரு நீர்ப்புனல் இருந்தால், அதனருகே போய் நிற்கையில், ஒரு சொட்டு நீரேனும் திவலையாக நம் மேல் விழுந்து விடும். அதனால்தான், அம்பாள் என்ன

> **அபிராமி பட்டர் பாடுகிறபோது அம்பாளிடம் எல்லாமே தாமரை என்பார். எப்போதுமே, எந்த சூழலிலுமே இளம் புன்னகையோடு இருக்கக்கூடியவள் ஸ்ரீ லலிதாம்பிகை.**

செய்கிறாள், தன் பக்தர்கள் தன் பக்கத்தில் வருவார்களோ மாட்டார்களோ என்று கருதி, சைதன்ய மலர்ச்செண்டை அப்படியே வாரிச் சொரிகிறாள்! அதன் துகள்கள் அவர்கள் பேரில் போய் விழுகின்றன. இதற்குப் பொருந்தும் திருநாமமே **சைதன்ய குஸுமப்ரியா.**

**மாறாத ஹிதம்**

**ஸதோதிதா** - ஸதா உதயமாக இருக்கக் கூடியவள். அப்படியென்றால், எப்போதுமே புத்தம் புதியவளாகப் பிரகாசிப்பவள். வ்ருத்தாவாக பழைமையில் பழைமையான வளும் அவளே; எப்போதும் புதிதாக எதை யேனும் வழங்கிக் கொண்டிருப்பவளும் அவளே.



இந்தத் திருநாமத்தை இப்படியும் யோசித்துப் பார்க்கலாம். உதய கால சூரியன் சுகமாக இருக்கும். உச்சிவேளை சூரியனோ தகிக்கும். அம்பிகை ஸதா உதிதாவாக இருப்பதனால், எப்போதும் ஹிதமான வெளிச்சத்தை, ஹிதமான பிரகாசத்தை, ஹிதமான வெப்பத்தைத் தரக் கூடியவள்.

**தருணாதித்ய பாடலா** - பாடலி புஷ்பம் வெள்ளையும் சிவப்பும் சேர்ந்த நிறத்தில், காந்தியோடு இருக்கும். அதைப் போன்று பிரகாசிக்கக் கூடியவள் அம்பிகை. அம்பாள் ராஜ ராஜேஸ்வரி மூல விக்ரஹ ரூபிணியாக இருக்கிறவள். பாடலிக்கான செம்மையோடு அவள் பிரகாசிக்கிறாள். வெளிர் செம்மை யாக எப்போதும் காட்சி தருகிறாள்.

**தக்ஷிணா தக்ஷிணாராத்யா** - ஸவ்ய மார்கம் அப ஸவ்ய மார்கம் என்பதைப் பற்றிப் பார்த்தோமே - அவற்றுள் ஸவ்யம் என்பதை வலது என்கிற பொருளில் எடுத்துக் கொள்ளும்போது, அதுவே தக்ஷிண மார்கம் என்றும் சொல் லப்படுகிறது. (இதற்கு எதிரான மார்கம்தான் வாம மார்கம்.)

தக்ஷிணா - தக்ஷிண மார் கத்தில் ஈடுபட்டோரால் ஆராதிக் கப்படுபவள். அதக்ஷிண ஆராத்யா - அதற்கு எதிர்மார்கமான வாம மார்கத்தவராலும் ஆராதிக்கப்படு கிறவள்.

**தரஸ்மேர முகாம்புஜா** - எப்போதும் புன்சிரிப்புடன் கூடிய முகத்தாமரையை உடையவள். அபிராமி பட்டர் பாடுகிறபோது - அம்பாளி டம் எல்லாமே தாமரை என்பார். வதனாம் புஜம், கராம்புஜம், பாதாம்புஜம், முகாம் புஜம் என்று எல்லாமே அம்புஜம் (தாமரை). அம்பாளின் முகமாகிற தாமரை, எப்போதும் சிரிப்புடன் காணப்படுகிறது. எப்போதுமே, எந்தச் சூழலிலுமே இளம் புன்னகையோடு இருக்கக்கூடியவள் ஸ்ரீ லலிதாம்பிகை.

**(வளரும்)**



# ஐம்புலன்களுக்கு நியாயம்

ஆடுகள உணவு பகுதி, ஐ.பி.எல். கிரிக்கெட் மேட்சைவிட சுவாரஸ்யம் நிறைந்ததாக இருந்தது.

- வி.சி.வெங்கடேஷ், திருச்சி

ஐயப்பன் என்றதும் கடின விரதம், அளவிட முடியாத அருள் என்பதுதான் நம் ஞாபகத்துக்கு வரும். திருச்சி ஐயப்பன் ஆலயத்தில், கோடைக் காலத்தில் தினமும் சுவையான, சத்தான, சுகாதாரமான நீர்மோர் சுமார் 2000 பேருக்கு வழங்கப்படுகிறது என்பது குளிர்ச்சியான செய்தி.

- எம்.இராஜேந்திரன், லால்குடி

“ஆக்கபூர்வமான எதிர்க்கட்சியாகவும் இல்லாமல், ஆலோசனை கூறும் கூட்டணிக் கட்சியாகவும் இல்லாமல் அரசியல் செய்யும் பா.ம.க. வரவர சிரிப்புக் கட்சியாக மாறி வருகிறது!

- ஆர்.பிரகாஷ், பொன்மலை

ஒரு உண்மையான கிரிக்கெட் அபிமானியின் எண்ணங்களை, அற்புதமாகப் படம்பிடித்து, தலையங்கமாய் வெளிப்படுத்தி, சிக்ஸர் அடித்த கல்கிக்கு ஒரு த்ரீ சீர்ஸ்!

- ரேவதிப்ரியன், ஈரோடு

என் சாண் உடம்புக்கு வயிறே பிரதானம் என்பதற்கேற்ப, உணவு ஸ்பெஷலை தயாரித்துக் கோடையில் வரும் உபாதைகளுக்குத் தீர்ப்பு கூறியது அருமை.

- எஸ்.மீனா, ஸ்ரீரங்கம்

வழக்கமான இதழ்களைவிட கோடைக் கால கொண்டாட்டம் உணவு ஸ்பெஷல், சம்திங் ஸ்பெஷலாக ஐம்புலன்களுக்கும் நியாயம் செய்தது.

- டி.வசந்தா, திண்டுக்கல்

கோடைக்கேற்ற உணவுமுறைகள் படித்து உஷ்ணம் தணிந்தது. நெஞ்சில் உற்சாகம் பிறந்தது.

- ஆர்.மாரிமுத்து, இலால்குடி

ஒரு சிறு குறையாலும் அகந்தை அழிந்து போகும் என்று கூறும் காஞ்சி முனிவரின் அருள்வாக்கு நல்ல அமுத வாக்கு!

- பி.ஆர்.மயிலப்பன், ஈரோடு

அம்மை நோயிலிருந்தும், மஞ்சள் காமாலை நோயிலிருந்தும் காப்பாற்றும் தாழம் பூ குடிநீர் தகவல் பயனுள்ளது!

- பா.அச்சுதன், வயலூர்

கிரேஸியின் பதிலை, பேய்த் தனமாக ரசித்து, வாசித்து, கிலியில்... ஸாரி... ஜாலியில் உறைந்தேன். மீண்டும்... ஸாரி...

# ◀ வட்டமேஜை ▶

ருந்தேன்.

- என்.கோமதி, நெல்லை

**வெ**ங்காயத்தின் மீது சத்தியம் என்ற லைப்பில் வெளிவந்த ஃபுட் பிட்ஸ் சய்திகள் சுவாரஸ்யமோ சுவாரஸ்யம்.

- ஏ.பி.எஸ். ரவீந்திரன், நாகர்கோயில்

**'கல்கி'** ஒவ்வொரு வாரமும் மெரு கறிக் கொண்டே போகிறது. அட்டைப் டம் முதல் உள்ளே உள்ள அனைத்து ம்சங்களும் மனத்தைக் கவரும் படியாக ள்ளன... 'கீப்...இட்...அப்...!'

- க.மீ.நஜ்முதீன், காயல்பட்டினம்

**ப**லம் - பலவீனம் என பன்முகத் ன்மை கொண்ட ஆளுமை பாத்திரங்களை சனையோடு விமர்சனம் செய்த புத்தக மெர்சனம் புதிய முயற்சி!

- எல்.மாறன், மேல்பட்டி

**கிழக்குப் பதிப்பகம் வழங்கும் ரூ.250/- மதிப்புள்ள நூல்கள் பரிசு பெறும் கடிதம்:**

**த**ஞ்சை பெரிய கோயில் உருவம் பதித்த நாணயத்தை வெளியிடுமாறு தமிழ் நாடு அரசு விடுத்த கோரிக் கையை மத்திய அரசு ஏற்றுக் கொண் டது என்ற செய்தி மன நிறைவைத் தருகிறது. நம்முடைய கோபுரங்கள் யாவும் தமிழ் அரசர்களால் கட்டப்பட் டவை. இராசராசன் கட்டியது கங்கை கொண்ட சோழபுரம் கோயில். இது தமிழர்களின் புராதனச் சின்னம். இந்த நிலையில், சோழ மன்னர்களின் பெய ரைக் கொண்ட தொல் திருமாவளவன், தமிழ்நாடு அரசு முத்திரையில் இருந்து கோயில் சின்னத்தை நீக்கக் கோரியி ருப்பது வருந்தத்தக்கது.

- ஜி.வெங்கட்ராமன், மும்பை

**சென்னை உயர்நீதிமன்ற வளாக அம்பேத்கர் சிலை திறப்பு விழாவில் நடந்த வழக்கறிஞர் - குண்டர்கள் தாக்கிக் கொண்ட விவகாரம், உயர்நீதிமன்ற வளாகத்தை மீண்டும் கலவர பூமியாக்கியிருக்கிறது. ''இதுபோன்ற அசம்பாவிதச் சம்பவம் இனி உயர்நீதிமன்ற வளாகத்தில் நடக்காது'' என்கிறார் சென்னை உயர்நீதிமன்ற வழக்கறிஞர்கள் சங்கத் தலைவர் பால்.கனகராஜ்! நமக்கும் அதை நம்புவதற்கு ஆசைதான்...!**



**அம்பேத்கர் சிலை யார் ஏற்பாடு?**

''உயர்நீதிமன்றத்தின் அறுபது நீதிபதிகளும் ஒருசேர முடிவெடுத்து வைக்கப்பட்ட சிலை. அதே போல் யாரை அழைப்பது என்று முடிவெடுத்ததும் அவர்கள்தான்.''

**கலைஞருக்குக் கறுப்புக் கொடி எதிர்பார்க்கப்பட்டதா?**

''விழா தேதி முடிவானதும், உயர்நீதிமன்றத்தில் இருக்கும் நான்கு வழக்கறிஞர் சங்கங்களின் நிர்வாகிகளை அழைத்துப் பேசினார்கள். விழா சுமுகமாக நடக்க ஒத்துழைப்புக் கொடுப்போம் என்று நாங்கள் சொல்லிவிட்டு வந்தோம்.''

**அப்புறம் ஏன் கலாட்டா?**

''முதல்வர் பேசத் துவங்கும் முன்னர், கடைசி வரிசையில் இருந்த ஆறு வழக்கறிஞர்கள் கறுப்புத் துணியைத் தூக்கிக் காட்டி ''அனுமதியோம்'' என்று முழக்கமிட்டார்கள். அவர்களுடன் சில வெளிநபர்களும் இருந்தார்கள். ''அம்பேத்கர் சிலை திறப்பதை விரும்பாத சில வழக்கறிஞர்கள் தாம் இது போன்று 'வேறொரு காரணத்தைச் சொல்லி' பிரச்னையைக் கிளப்புகிறார்கள் என்று சில வழக்கறிஞர்கள் நினைத்துவிட்டார்கள். எனவே, அவர்கள் கோஷம் போட்டவர்களைக் கூட்டத்திலிருந்து ஒதுக்கி அப்புறப்படுத் நடவடிக்கை எடுத்தார்கள்.''

**தி.மு.க. தொண்டர்களும் கோஷ போட்டவர்களைத் தாக்கினார்களே? நா காலி வீச்சும் நடந்ததே!**

''நான் முதல் வரிசையில் அமர்ந்திரு தேன். தங்கள் தலைவருக்கு எதிராகக் கோஷ போட்டவர்களை தி.மு.க.வினரும் விரட் யடிக்க முயற்சி செய்திருக்கக்கூடும். ஏதே பிரச்னையாகும் என்று எதி பார்த்தே தி.மு.க.வினரு வந்திருந்ததாகப் பின்ன கேள்விப்பட்டேன்.''



**-சென்னை உயர்நீதிமன்ற வழக்கறிஞர் சங்கத் தலைவர் பேட்டி**

**விழா சுமுகமாக நடக் உங்கள் சங்கம் உறு அளித்தபின் ஏன் இந்த கலாட்டா?**

''கோஷம் போட்டவ கள் வழக்கறிஞர்கள் சங்



கலவர பூமி போல ஆகிவிட்டதே; வழக்கறிஞர்கள் சிலரும் ரௌடித்தனமாக நடந்து கொள்வதாகப் புகார் இருக்கிறதே?

"பொதுவாகவே சுதந்திரப் போராட்டக் காலத்திலிருந்து பார்த்தால், வழக்கறிஞர்கள் சமூகம், ஒரு போராட்ட சமூகமாக உருவாகி வந்திருக்கிறது. எங்கள் சங்கம், ஜாதி, மதம், அரசியலுக்கு அப்பாற்பட்டது. ஆனால், சமீப காலமாகச் சில கறுப்பு ஆடுகள் கலவரச் சூழலை உருவாக்குவது உண்மைதான். சமூகத்தில் மற்றப் பிரிவுகளில் உள்ளது போலத்தான் வழக்கறிஞர்கள் சமூகத்திலும் சீரழிவு இருக்கிறது!"

**தொலைக்காட்சி காமிராக்காரர்களைத் தாக்கியது எந்தவிதத்தில் நியாயம்?**

"இதற்காக நான் மிக வருத்தப்படுகிறேன்.

# கறுப்பு ஆடுகள் - கலவரச்சூழல்

கட்டளைகளுக்குக் கட்டுப்படாத நிலையில் எல்லா விளைவுகளையும் அவர்களே ஏற்றுக் கொள்ள வேண்டும். நாங்கள் பொறுப் பேற்க மாட்டோம்."

**அவர்களைச் சங்கத்திலிருந்து நீக்க வேண்டியதுதானே?**

"சில நடைமுறைப் பிரச்னைகள் இருக் கின்றன. 12,000 பேர் இருக்கும் எங்கள் சங்கத்தில், மூன்றில் ஒரு பகுதியினர் கூடி பின்னர்தான் ஒருவரை நீக்குவது பற்றி முடி வெடுக்க முடியும். அதிலும் முதலில் நோட் டீஸ் கொடுப்பது உட்படப் பல கட்டங்கள் இருக்கின்றன."

**கடந்த ஒரு வருடமாக உயர்நீதிமன்றம்**

ரௌடித்தனத்தில் ஈடுபடுபவர்கள், 'தாங்கள் மாட்டிக் கொண்டு விடுவோமோ?' என்ற பயத்தில் காமிராக்களை உடைத்திருக்கிறார் கள்."

**முடிவில் என்னதான் சொல்கிறீர்கள்?**

"முதல்வர், உச்சநீதிமன்ற தலைமை நீதிபதி ஆகியோர் முன்னிலையில் இது போன்ற சம்பவங்கள் நடந்தது ஒரு கரும்புப் புள்ளிதான். வருத்தமாக இருக்கிறது" என்கிற பால்.கனகராஜ், "2009-ல் நடந்த வழக்கறிஞர் கள் காவல்துறை மோதலில் சம்பந்தப்பட்ட ஐ.பி.எஸ். அதிகாரிகளை சட்டத்தின் முன் நிறுத்தும் வரை ஓயமாட்டோம்" என்றும் அதே மூச்சில் சபதம் செய்கிறார்.

**- ப்ரியன்**

லதாசேகர்

# பகவானுக்கு

"இட்ஸ் டு ஹாட்... கோக், பெப்ஸி குடிச்சாத்தான் சிஸ்டம் வில் பி கூல். சில் ஆன்னு 'கல்படிச்சாத்'தான் வேலையே ஓடும். மம்மி! ஃப்ரிஜ்ல கூல்ட்ரிங்லே ஏம்மா வாங்கி வைக்க மாட்டேங்கற, என் ஃப்ரெண்டு வீட்ல பாட்டில் பாட்டிலா ஸ்ப்ரைட், மாஸான்னு அடுக்கி வச்சிருக்கா..." என்று அலுத்துக் கொள்ளாத இளைஞர்களும் உண்டா?

ஸம்மர் கூல்ட்ரிங்ஸ் என்றாலே பாட்டிலில் கிடைக்கும் மேற்சொன்ன பானங்கள்



தானா...? நம் வீட்டிலேயே சாதாரணப் பொருட்களை வைத்து அதைவிடப் பிரமாத மான ஜில்லோ ஜில் பானங் களைத் தயாரிக்க முடியும். உச்சி முதல் உள்ளங்கால் வரை குளிர்ச்சியோ குளிர்ச்சி..

பானகம் என்று ஒரு அற்புத மான ட்ரிங்க்... இதை ஸ்ரீராம நவமி அன்று கண்டிப்பாகச் செய்வார்கள். "பெருமாளுக்கு நைவேத்தியம் செய்துவிட்டு, பானகச் சொம்பை அப்படியே தலையை உசத்தி தொண்டைக்குள் க்ளக்கென்று விழுங் கும்போது, ஒரு சுகம் இருக்கே... அசாத்தியம்..." என் வசுமதி மாமி லயித்துச் சொல்வார்.

மிக மிக சுலபமாக பானகம் செய்து விடலாம். குடிப்பதற்கும் செம டேஸ்ட். நம்பிக்கையில்லாதவர்கள் பானக நரசிம்மரைப் பார்த்து விட்டு வரவும். ஆந்திராவின் மங்களகிரியிலிருக்கும் பானக நரசிம்மரின் கோயில் பிரசித்திபெற்றது. இங்கு ஒருமுறை சென்றாலே, மோட்சம் என்பதுடன், இங்கிருக்கும் சுயம்புவான நரசிம்மருக்கு பிடித்ததே பானகம்தான். சங்கினால் தினமும் பெருமாளுக்கு படைக்கப்படும் பானகத்தை க்ரென்று (ஓசை கேட்கும்) ஒரே மூச்சில் குடித்துவிட்டு, கால் பாகத்தை பிரசாதமாக வெளியே அனுப்பி விடுகிறார்.

வெல்லம், சுக்கு, ஏலக்காய் சேர்த்த எளிமையான பானகத்தைக் குடித்தால் நன்மை என, கடவுளே நமக்குச் சொல்லிக் கொடுக்கிறார்.

வெல்லத்திலிருக்கும் நன்மைகள் எக்கச்சக்கம். நம் உடலை, மெயினாக சிஸ்டத்தை க்ளீன் செய்யும். அது வது ஜீரணத்தை பக்காவாக செய்யத் தூண்டும் ஒரு ஏஜெண்டாகச் செயல்படும். பார்ப்பதற்கு கரடு முரடாக கருப்பாகத் தெரியும் வெல்லம், உண்மையில் நம் ஸ்வீட் சிநேகிதி.

ஒரு சின்ன வெல்லக் கட்டியை மென்றாலே, தொண்டை டைப் வழியே பயணித்துக் கொண்டே 'சுத்தம் என்பது நமக்கு சுத்தம் உள்ள சிஸ்டம்தான்'ஐ கஜேபரமாக பாடிக் கொண்டே ஃபுட் பைப், நுரையீரல், வயிறு, குடல்... என க்ளீனாக்கிவிடும். வெல்லத்தை சாப்பிடுபவர்களுக்கு கான்ஸ்டிபேஷனே கிடையாது என வெல்ல புராணத்தில் சொல்லப்படுகிறது.

மாசுபடைத்த காற்றை சுவாசிக்கும் நம் இதயம், நுரையீரலுக்கும் வெல்லத்தினால் ரக்ஷை கவசம் கிட்டுகிறது. ஆயிரக்கணக்கில் தொழிற்சாலையில் வேலை செய்யும்



கக்குப்பொடி கலக்க பானகம் தயார். இதில் எலுமிச்சைச் சாறு மற்றும் மிளகுப் பொடியும் டேஸ்டுக்கு தகுந்தாற்போல் சேர்க்கலாம்.

இந்த சம்மர் கூலர் பானகம் ஒரு தம்ளர் பருகினாலே போதும்! ஜில் ஜில் ரமாமணியாக உலா வருவீர்கள். (குளிர்ச்சியா குடிச்சுட்டு வட்டமேஜைக்கு லெட்டர் எழுதுங்க அம்மணிங்களா..)

இன்னொரு மிக எளிமையான எவி ட்ரிங்க் நம் நீர் மோர். படங்கர பதவிசு, சிம்பிளா இருக்கும். ஆனால் பலன் இருக்கிறதே... அபாரம்! பொட்டாசியம், வைட்டமின் பி 12, கால்ஷியம், பாஸ்பரஸ், ரிபோஃப்ளாவின் என அத்தனை நன்மைகளும் சிங்கிள் க்ளாஸ் நீர் மோரில்.

# டித்த எனி ட்ரிங்க்!

தொழிலாளர்கள், நாள் முழுக்க சாலைப் பணி செய்து வரும் டிராஃபிக் போலீஸ் போன்றோர், ரெகுலராக வெல்லம் சாப்பிட்டாலே போதுமாம். லகுவாக மூச்சு விட முடியும்; பொல்யூஷனுடன் போராட முடியும் என்கின்றனர் வெல்ல ஆதரவாளர்கள்.

எமர்ஜென்ஸி டாக்டர் எனப்படும் வெல்லம். அதில் பானகம் தயாரிக்கும் முறையைப் பார்ப்போமா?

### பானகம்

**தேவை:** வெல்லம்-1½ கப், தண்ணீர் - 4 கப், சுக்குப்பொடி - 2 டீஸ்பூன், ஏலப்பொடி-1 டீஸ்பூன்

**செய்முறை:** முதலில் வெல்லத்தைச் சிறிதளவு நீரில் கரைத்து அடுப்பில் வைக்கவும். கரைந்த பிறகு, ஆறவைத்து வடிகட்டவும். இதில் ஏலம், தண்ணீர்,

ஜீரணத் தகராறு உள்ளவர்களுக்கு பாலை நிறுத்திவிட்டு, மோரை சாப்பிடச் சொல்லுவார்கள் டாக்டர்கள். ஒரு தம்ளர் மோரில் கலோரி அளவு 99 மட்டுமே. கொழுப்புச்சத்து 2.2 கிராம். வெயிட்டைக் குறைக்கணும் என எண்ணும் பார்ட்டிகள் கண்டிப்பாக நீர்மோர் குடிக்க வேண்டும். அந்தக் காலத்து சாவித்திரி மாதிரி இருப்பேன், இப்ப த்ரிஷாவாயிட்டேன் (திரியிலிருந்து த்ரிஷா) என அலம்பல் பண்ணலாம். ●

# ஏரிக்கரையில் பிரார்த்தனை!






**நா**னும் எனது தோழிகளுமாய் நான்கு பேர் சேர்ந்து சிக்கிம் போக முடிவெடுத்தபோது, மேற்கு வங்காளத்தில் சில இடங்களும் அந்த டூரில் சேருமெனத் தெரிந்தது. திட்டமிட்டு விமானம் மூலம் பாக்தோத்ரா அடைந்து, அங்கிருந்து ஜீப்பில் இரண்டு மணி நேரப் பயணத்துக்கு பிறகு காலிம்பாங்க் அடைந்தோம். அங்கு பார்க்க வேண்டிய சில முக்கியமான இடங்கள் உண்டு.

**1) பைன் விழு நர்சரி** - இங்கு 1200-க்கும் மேற்பட்ட விதவிதமான கள்ளி வகைகளில் செய்த பல்வேறு உருவங்கள். பற்பல நிறங்களில் மலர்கள்.

**2. தெயாலோ குன்று** - மலை சிறியதுதான். ஆனால் அழகான செடிகொடிகள் மகா அழகாய், மனசுக்குள் மகாசிகரமாய் நின்றுவிடும்.

**3. சின்னதாய் ஒரு காளி கோயில்** - குறிப்பிடத்தக்க விசேஷம், மல்லாந்து படுத்திருக்கும் சிவபெருமானின் மேல் நின்றிருக்கும் காளி மாதா! இந்தத் தாயை வேண்டினால் சகலமும் கிடைக்கும் என்ற நம்பிக்கை, சாகாத சத்யமாய் உலா வருகிறது. எல்லாவற்றையும் பார்த்துவிட்டு, சிக்கிம் தலைநகரான காங்டாக் பயணமானோம். டாக்ஸியைத் தவிர வாகன வசதி ஏதுமில்லை. செங்குத்தான மலைகளின் மேல்தான் நான்கு மாடிக் கட்டடங்கள். அந்த நகரைப் பார்த்தபின், வடக்கு சிக்கிமில் உள்ள பெல்லிங் என்ற ஊரை அடைந்தோம். அட! அந்த ஊரில் இட்லி, தோசை கிடைத்தது. சாப்பிட்டுவிட்டுச் சில மணி நேரப் பயணம். ரிம்பி நீர்வீழ்ச்சி, கஞ்சன்ஜங்கா நீர்வீழ்ச்சிகளை அடைந்தோம். ஒரு குளியல். அருவியில் தலையை





ராம்ப நேரம் வைக்க முடியாது. தலை கழன்றுவிடும் ளவு நீர் விழும் வேகம்.

அப்புறம், கெச்சியோ பால்ரி விஷிங் லேக். அது டர்ந்த காட்டின் நடுவே ஒரு ஏரி. அதை அடைய மூகிய பாதை. ஏரி மீன்களுக்கு பொரி போட்டு, ங்குள்ள ஒரு கம்பில் ஒரு பட்டுத் துணியைச் சுற்றி ட்டு, ஏரிக்கரையில் நின்று பிரார்த்தனை செய்தால், யாயமான ஆசைகளை நிறைவேற்ற இறைவன் வரம் ளிப்பாராம். எங்களின் நியாயமான ஆசையை அவர் டவுள்தான்) காதில் போட்டு விட்டுத் திரும்பும் பாது... பனிக்கட்டி மழை பெய்யத் துவங்கியது. இந்தக் டினமான மலைப் பாதையில் வண்டி ஓட்டும் நபருக்கு ாதச் சம்பளம் ரூபாய் இரண்டாயிரம் மட்டும்தானாம். க்கிமின் வருமானமே சுற்றுலாதான்.

கொஞ்சம் ரிலாக்ஸ் செய்தபின் மேற்கு வங் ானத்தில் உள்ள டார்ஜிலிங் பயணமானோம். இங்கு பூர்வ விலங்குகள் கொண்ட உயிர்காட்சி சாலை ண்டு. மலை ஏறும் முறைகளையும் சாகசங்களையும் டச் செய்து காட்டுகிறார்கள். ஜப்பானியக் கோயிலும், டகர் ஹில்லில் இருந்து பனியில் குளித்துவிட்டு வெளியே வரும் இளஞ்சூரியனைப் பார்ப்பதும் கவானைப் பார்த்த பரவசம்.

தண்ணீர்ப் பிரச்னை இவ்வூரில் அதிகம். தள்ளு வண் யில் பிளாஸ்டிக் ஜாடியில் நிரப்பிக் கொண்டு வருகின் ஊர். தென்னிந்தியா என்ற ஒன்று இருப்பதே அவர்களுக் த் தெரியவில்லை. வறுமையில் உழலும் மக்கள்தாம்- ருயினும் நட்பு தவழும் உதடும், புன்னகை மலரும் கமும், அயராத உழைப்பும் அவ்வூரிலிருந்து வந்த ின்பும் நம் மனத்தில் அப்படியே கதகதப்பூட்டிக் கொண் ருக்கிறது. ○









# புராதன வழித்தடங்கள்

'புதிரான வழித் தடங்கள்' என்ற பெயரி வீரப்பன் வாழ்க்கையை ஒட்டி அவன் காட்டில் அலைந் திரிந்த பகுதிகளை, சுற்றுலாப்பயணிகள் பார்வையிட ஏற்பா செய்திருக்கிறது கர்நாடக வனத்துறை - இது சமீபத்தில் வெளியா செய்தி!

மீண்டும் வீரப்பனை நினைவுபடுத்தி ஒரு சுற்றுலா அவசியமா இந்த நடவடிக்கை அங்கு வாழும் தமிழ் மக்கள் மீது உள்ள வெறுப்புக் நெய் ஊற்றுவது போல ஆகாதா? இது பல வேண்டாத பின்விளைவ களையும், மணக்கசப்பையும் ஏற்படுத்தும் என்று, தில்லி தமிழரும், வடக் வாசல் பத்திரிகையின் ஆசிரியருமான யதார்த்தா பென்னேஸ்வரன், தமது வலைப்பூவில் எழுதியிருந்தார்.



இந்த சர்ச்சை குறித்து கர்நாடக வனத்துறை அதிகாரி அஷோக் கவுட விடம் நாம் தொலைபேசி மூலம் தொடர்பு கொண்டோம். ''வீரப்பன் மரணத்துக்குப் பிறகு, கர்நாடக வனப்பகுதியில் சுற்றுலா அபிவிருத் திட்டத்தின் ஒரு பகுதியாக இந்த மலையேறும் சுற்றுலா ஆரம்பிக்க பட்டிருக்கிறது. கர்நாடகாவிலிருந்து மட்டுமில்லாமல், பிற மாநிலங்களில் இருந்தும் இதற்கு நல்ல வரவேற்பு கிடைத்துள்ளது. இது முழுக் முழுக்க சுற்றுச்சூழல் மேம்பாட்டு, இயற்கையோடு இணைந்த மலை யேற்ற சுற்றுலாதான். வீரப்பன் வாழ்க்கையை இதனோடு இணைத்தது சும்மா சுவாரஸ்யத்தைக் கூட்டுவதற்குத்தான்''.. என்றார்!

*உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாட்டில் நிறைவேற்ற, தீர்மானங் களைத் தயாரித்து வரு கிறது மாநாட்டுக் குழு. தமிழ் அபிமானிகளான சிலர் பரிந்துரைக்கும் தீர்மானங்களை வார ஒன்றாக இப்பகுதியில் வழங்குகிறது கல்கி.*



*''தமிழ் பயிற்றுமொழி, தமிழில் பெயரிட்ட திரைப்படங்களுக்குப் பரிசு, தமிழில் பெயர்ப்பலகை இதெல்லாம் புற அழகு பம்மாத்துதான்! தமிழன் வேலை, பொருளாதாரத்தில் வேர் பிடித்தால் அவ இருப்பு சாத்தியமாகும். அப்போது, தமிழ் மொ வெறும் அலங்காரமல்ல, வேர் என்ற உண்மை பு னாகும். அதற்கு தமிழ்ப் பட்டதாரிகளுக்கு அரச வேலை வாய்ப்பில் முன்னுரிமை அளித்து, தனியா நிறுவனங்களும் அதைப் பின் தொடரச் செய்ய வேண்*

# போடுங்கய்யா தீர்மானம்-2

## உலகத்தமிழ்ச் செம்மொழி மாநாடு



*டும். அதுதான் உண்மையான தமிழின், தமிழனின் வளர்ச்சியாய் அமை யும். இதற்கு, செம்மொழி மாநாட்டில் மட்டுமல்ல; சட்ட சபையிலும் தீ மானம் சட்டமாக வரைய வேண்டும்.''*

**- கவிப்பேரரசு அருமையா**

**(தாய்மண் - இதழாசிரியர் - 'தாய்மண்' இலக்கியக் கழக நிறுவன**

Registered with the Registrar of Newspaper of India under No.1041/57" Registered No.TN/CC (S) DN / 144 / 09 - 11" Licensed post without prepayment under PMG's Licence No.WPP TN / CC (S) DN / 70 / 09 /11" Registered as a Newspaper in Srilanka